8 நெய்யுலை சொரிந்த மையூ னோசை
9 புதுக்கண் மாக்கள் செதுக்கண் ணாரப்
க0 பயந்தனண் மன்னோன் முன்னே யினியே
11 பல்லாத் தழீஇய கல்லா வல்வில்
12 லுழைக்குரற் கூகை யழைப்ப வாட்டி
13 நாகுமுலை யன்ன நறும்பூங் கரந்தை
14 விரகறி யாளர் மரபிற் சூட்ட
கரு நிரையிவட் டந்து நடுகல் லாகிய
16 வென்வேல் விடலை யின்மையிற் புலம்பிக்
17 கொய்ம்மழித் தலையொடு கைம்மை யுறக் கலங்கிய
18 கழிகல் மகடூஉப் போலப்
19 புல்லென் றனையாற் பல்லணி யிழந்தே.

திணையும் துறையும் அவை.

......... ஆவூர்மூலங்கிழார் பாடியது.

(இ - ள்.) அந்தோ! என்னிறைவனது அடையாத பெரிய இல்லே, வண்டு கள்படியும் மதுவினால் ஒழியாதமண்டையுடனே யாவர்க்கும் வரையாமல்வழங்கும் மிக்க சோற்றையுடைய முரிந்த குறட்டையுடைத்தாகியமுற்றம் நீரற்றயாற்றினோடம் எத்தன்மைத்து அத்தன்மைத்தாகக்கண்டேன், நிச்சயமாக; என்கண்ணினி சோர்ந்துவீழ்வனவாக; உலகத்தைக்காக்கும்வேந்தருடைய செல்வமிக்கதிருநக ரின்கண் மதத்தான் மயங்கியயானை உயங்குதலான் நெட்டுயிர்ப்புக்கொண்டாற் போன்ற நெய்காய்கின்ற உலையின்கண் சொரியப்பட்ட ஆட்டிறைச்சியினது ஓசை யையுடைய பொரியலைப் புதுமாந்தருண்டு ஒளிமழுங்கினகண்கள்நிறையவுண் டாக்கினாய், முன்பு; அது கழிந்தது; இப்பொழுது பல ஆனிரையைக்கைக்கொ ண்டு கற்கவேண்டாத வலிய விற்படையைத் தன்னிடத்தே குரலைமிகவுடைய கூகை தன் இனத்தை அழைக்கும்படி அலைத்து நாகினதுமுலைபோன்ற நறியபூவை யுடைய கரந்தையை அறிவுடையோர்சூட்டுமுறைமையிலேசூட்ட நிரையை இவ் வூரின்கண் மீட்டுத்தந்து நடப்பட்ட கல்லாகிய வென்றிவேலையுடைய இறைவனில் லாமையால் தனித்துக் கொய்யப்பட்ட மட்டமாகிய தலையுடனே கைம்மைநோ ன்பு மிகக் கலக்கமுற்று ஒழிக்கப்பட்ட அணிகலத்தையுடைய அவன்மனைவியை யொப்பப் பொலிவழிந்தனை, பல அழகுமிழந்து. (எ - று.)

அம்பியினென்புழி, இன் - அசைநிலை. 'அம்பியினற்றுக' என்று பாடமோது வாருமுளர். மன் - கழிவின்கண்வந்தது. கண் - அசை.

எந்தையோரில்லே! செதுக்கணாரப்பயந்தனைமுன்; இனி, மகடூஉப்போலப் பல அணியுமிழந்து புல்லென்றனையாய் அம்பியற்றுகக்கண்டேன்; கண்ட என்கண் சோர்கவெனக்கூட்டுக.

ஓசையென்றது, ஆகுபெயரான் ஓசையையுடையகறியை; இஃது ஓர்திசைச் சொல். 'செதுக்கணார' என்பதற்குச் செதுகின குடர்நிறையவென்றுமாம்; கைம் மிஞ்சவென்றுமாம்.

(உசுக)

(உசூஉ.) நறவுந் தொடுமின் விடையும் வீழ்மின்
2 பாசவல் இட்ட புன்காற் பந்தர்ப்
3 புனறரு இளமணல் நிறையப் பெய்ம்மின்
4 ஒன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று
௫ நிரையொடு வரூஉம் என்னைக்
6 குழையோர் தன்னினும் பெருஞ்சா யலரே.

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு; தலைத்தோற்றமுமாம்.
........ ........ மதுரைப்பேராலவாயார் பாடியது.

தலைத்தோற்றமாவது,—

*"உரவெய்யோ னினந்தழீஇ
வரவுணர்ந்து கிளைமகிழ்ந்தன்று."

(இ - ள்.)—மதுவையும் அலைத்துண்ணும்படி பிழிமின்; ஆட்டுவிடையையும் படுமின்; பசிய தழையால் வேயப்பட்ட புல்லிய காலையுடையபந்தரின்கண் நீர் கொழித்துக் கொடுவரப்பட்ட இளையமணலை நிரம்பப்பரப்புமின்; பகைவரது தூசிப்படையை முறித்துப், பெயர்ந்துபோதுகிற தனதுபடைக்குப்பின்னேநின்று நிரையுடனேவருகின்ற என்னிறைவனுக்குப் பக்கமறவாராய் நிரைகொண்டுவருவோர் அவன்றன்னினும் பெரிய இளைப்பையுடையர். (எ - று.)

சாயல் - விடாயாலுண்டானமென்மை.

என்னைக்கு, உழையோர் தன்னினும் பெருஞ்சாயலர்; அவர்க்கு நறவும்தொடுமின்; விடையும்வீழ்மின்; பெய்ம்மினெனக்கூட்டுக. (உசூஉ)

(உசூங.) †பெருங்களிற் றடியிற் றோன்று மொருகண்
2 ணிரும்பறை யிரவல சேறி யாயிற்
3 றொழாதனை கழித லோம்புமதி வழாது
4 வண்டுமேம் படூஉமிவ் வறநிலை யாறே
௫ பல்லாத் திரணிரை பெயர்தரப் பெயர்தந்து
6 கல்லா விளையர் நீங்க நீங்கான்
7 வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்
8 கொல்புனற் சிறையின் விலங்கியோன் கல்லே.

திணை - கரந்தை; துறை - கையறுநிலை.
........ ........

(இ - ள்.)—பெரியகளிற்றின் அடிபோலத்தோன்றும் ஒருகண்ணினையுடைத்தாகிய பெரிய பறையினையுடைய இரவலனே, நீபோகின்றாயாயின் தொழாயாய்ப்

* புறப்பொருள்வெண்பாமாலை, வெட்சிப்படலம், கஉ.

† இதுமுதலிய மூன்றுபாட்டுக்களின் உரையும், உசூரு-ம் பாட்டும் அதனுரையும் மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக்கவிராயரவர்கள்வீட்டுப் பிரதியில்மட்டுமிருந்தன.

போதலைப்பரிகரிப்பாயாக; த தெ....... வண்டுகள், மேம்பட்டுவாழும், இக்கொடியவழி; பல ஆக்களாகிய திரண்டநிரை மீண்டு தன்னோடுபோதரப்போந்து இயல்பாகிய போர்த்தொழிலையுடையவீரர், இரிந்தோடத், தான்போகானாய் வில்லுமிழப்பட்ட விரைந்த அம்புகுளிப்பக் கரையைக்கொல்லும், புனலின்கண் அணைபோல எதிர்நின்றுவிலக்கியவனதுகல்லை.—(எ - று.)

புனற்சிறையின்விலங்கியோன்கல்லைத் தொழாதனைகழிதலை ஓம்பு; தொழவே அவ்வறநிலையாறுவண்டுமேம்படுமெனக்கூட்டுக.

தொழுதுபோகவே கொடுங்கானம்மழைபெய்தலாற்குளிருமென்பான், காரியமாகியவண்டுமேம்படுதலைக்கூறினான். வண்டென்பது, மறவருளொருசாதியென்பாருமுளர். ஆறு வண்டுமேம்படூஉமென, இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்துமேலேறிநின்றது. (உசங)

(உசச.) பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி
மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொ
டணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்
தினிநட் டனரே கல்லுங் கன்றொடு
(ரு) கறவை தந்து பகைவ ரோட்டிய
நெடுந்தகை கழிந்தமை யறியா
தின்றும் வருங்கொல் பாணரது கடும்பே!

திணையும் துறையும் அவை.

........ *உறையூர் இளம்பொன்வாணிகனார் பாடியது.

(இ - ள்.) பருக்கைகளையுடையவிடத்துத் திட்டையைச்சேர்த்தி ஆண்டுள்ள மரலைக்கீறித்தொடுக்கப்பட்ட சிவந்தபூவையுடைய கண்ணியுடனே, அழகியமயிலினது பீலியைச்சூட்டிப், பெயரையெழுதி இப்பொழுதுநட்டார், கல்லையும்; கன்றுடனே கறவையையுமீட்டுக்கொண்டுவந்து, மறவரையோட்டிநோக்கிய நெடுந்தகை பட்டமையறியாது இன்றும்வருங்கொல்லோ, பாணரது சுற்றம்?—(எ - று.)

பட்டமையறிந்துவாராதொழியுமோ, அறியாதுவருமோவென, ஐயமாக்குக. பதுக்கைசேர்த்தலேயன்றிக் கல்லும் நட்டனரென, உம்மை எஞ்சிநின்றது (உசச)

(உசரு.) ஊர்நனி யிறந்த பார்முதிர் பறந்தலை
யோங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீப்
போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்துப்
பல்லான் கோவலர் படலை சூட்டக்
(ரு) கல்லா யினையே கடுமான் றோன்றல்
வானேறு புரையுநின் றாணிழல் வாழ்க்கைப்
பரிசிலர் செல்வ மன்றியும் விரிதார்க்
கடும்பகட் டியானை வேந்த
ரொடுங்கா வென்றியு நின்னொடு செலவே.

* .........ன்சாத்தங்கொற்றனார் பாடியதென்றும் பிரதிபேதமுண்டு.

திணையும் துறையும் அவை.

........ மூகையலூர்ச் சிறுகருந்தும்பியார் பாடியது.

(இ - ள்.) ஊனாமிகவுங்கடத்து முரம்புநிலமாகிய முதிர்ந்த பறந்தலையிடத்து உயர்ந்தநிலையையுடைய வேலிகையினது ஒள்ளிய கொத்தாகிய நறியபூவைப் புனையோலையாலலங்கரித்துத்தொடுத்த ........................ (உசுரு)

(உசுசா.) *பயங்கெழு மாமழை பெய்யாது மாறிக்
2 கயங்களி முளியுங் கோடை யாயினும்,
3 புழற்கா லாம்ப லகலடை நீழற்
4 கதிர்க்கோடு நந்தின் சுரிமுக வேற்றை
5 நாகிள வளையொடு பகன்மணம் புகூஉம்
6 நீர்திகழ் கழனி நாடுகெழு பெருவிறல்
7 வான்றோய் நீள்குடை வயமான் சென்னி!
8 சான்றோ ரிருந்த வவையத் துற்றோன்
9 ஆசா கென்னும் பூசல் போல
10 வல்லே களைமதி யத்தை யுள்ளிய
11 விருந்துகண் டொளிக்குந் திருந்தா வாழ்க்கைப்
12 பொறிப்புண ருடம்பிற் றோன்றியென்
13 னறிவுகெட நின்ற நல்கூர் மையே!

திணை - பாடாண்டிணை; துறை - பரிசில்கடாநிலை.

சோழன் உருவப் பஃறேரிளஞ்சேட்சென்னியைப் பெருங்குன்றூர்கிழார் பாடியது.

(இ - ள்.) பயன்பொருந்திய பெரியமுகில் பெய்யாதொழிதலால் நீர்நிலைகள் களியாய்முளியும் கோடைக்காலமாயினும் துளைபொருந்திய தாளையுடைய ஆம்பலினது அகலிய இலையினிழற்கண் கதிர்போலுங்கோட்டையுடைய நத்தையினது சுரிமுகத்தையுடைய ஏற்றை நாகாகிய இளையசங்கொடே பகற்காலத்தேமணங்கூடும் நீர்விளங்கும் வயலையுடைத்தாகிய நாட்டையுடைய பெரிய வென்றியையுடையோய்! ஆகாயத்தைப்பொருந்தும் நெடியகுடையினையும் வலியகுதிரையினையுமுடைய சென்னி! அறிவானமைந்தோர் தொக்கிருந்த அவையின்கண் சென்று பொருந்தினொருவன் யானுற்ற துன்பத்திற்குத்துணையாய் எனக்கு நீர் பற்றுக வேண்டுமென்னும் ஆரவாரத்தை அவர் விரையத்தீர்க்குமாறுபோல விரையத் தீர்ப்பாயாக, என்னைக் கருதிவரப்பட்ட விருந்தினரைக்கண்டுவைத்து அவர்க்கு விருந்தாற்றமாட்டாமல் ஒளிக்கும் நன்மையில்லாத இல்வாழ்க்கையையுடைய ஐம்பொறியும் குறைவின்றிப்பொருந்திய எனது யாக்கையின்கட்டோன்றி அவற்றானாயபயன்கொள்ளாதபடி எனது அறிவுகெட நிலைபெற்ற வறுமையை.—(எ - று.)

மதியும் அத்தையும் - அசைநிலை.

* இப்பாட்டு, புறத்திரட்டிலுங் காணப்பட்டது.

266 - 270



பெருவிறல் சென்னி; சான்றோரிருந்த அவையத்துற்றோன்பூசலை, அவர் விளையக்களைந்தாற்போல வந்து நல்கூர்மையை வல்லைகளைகென்கூட்டி வினைமுடிவுசெய்க.

நந்து வளையொடு பகன்மணம் புகூஉமென்றகருத்து: அவ்வ் தம்செருக்கினால் சாதியறியாது மயங்கிப்புணருமென்று நாட்டின்மிகுதி கூறியதனால், அவன் செயல் மிகுதிகூறியவாறு. ‘நாகிளந் தவளையொடு பகன்மணம் புகூஉம்’ என்று பாடமோதி, நந்திநேற்றை நாகிளந்தவளையுடனே தத்தம் இனத்தொடு மணம்புகூஉமென்றுரைப்பினுமமையும். ‘ஆசாகு’ என்பதனை இரங்கற்குறிப்புப்படுமொழியென் பாருமுளர். பெருவிறலையுடைய வயமான்சென்னியெனினுமாம். ‘பொறிப்புணருடம்பிற் றோன்றி’ என்பதற்குப் பாவைபோலும் வடிவுமாத்திரையேதாயன்றித் தோன்றியபயன்கொள்ளாமையால் என் அறிவுகெடநின்ற நல்கூர்மையென்றும், ‘விருந்துகண் டொளிக்கும்’ என்பதற்கு வறுமைகண்டு வந்தவிருந்து தாம் அது காணமாட்டாது ஒளிக்குமென்றும் உரைப்பாருமுளர். மாறியென்பது, மாறவெனத்திரிக்கப்பட்டது. (உசுசு)

*(உசுஎ.) ......... ......... ......... .........

*(உசுஅ.) ......... ......... ......... .........

(உசுகூ.) †குயில்வா யன்ன கூர்முகை யதிரல்
பயிலா தல்கிய ......காழ் மாலை
மையிரும் பித்தை பொலியச் சூட்டிப்
புத்தகற் கொண்ட புலிக்கண் வெப்ப
ரு ஒன்றிரு முறையிருந் துண்ட பின்றை
உவலைக் கண்ணித் துடியன் வந்தெனப்
பிழிமகிழ் வல்சி வேண்ட மற்றிது
கொள்ளா யென்ப கள்ளின் வாழ்த்திக்
கரந்தை நீடிய வறிந்துமாறு செருவிற்
க0 பல்லா னின்னிரை தழீஇய வில்லோர்க்
கொடுஞ்சிறைக் குரூஉப்பருந் தார்ப்பத்
தடிந்துமாறு பெயர்த்தவிக் கருங்கை வாளே.

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு.

ஔவையார். (உசுகூ)

(உஎ0.) பன்மீ னிமைக்கு மாக விசும்பின்
இரங்கு முரசி னினஞ்சால் யானை

* இவ்வெண்களுக்குரியபாட்டுக்கள், கிடைத்த கையெழுத்துப்பிரதிகளுள் ஒன்றிலும் காணப்படவில்லை.

† இதுமுதலிய வெல்லாப்பாட்டிற்கும் உரை அகப்படவில்லை; மூலங்களும் இடையிடையே சிதைந்தும் பொருளினுண்மைகாணக்கூடாதவண்ணம் பிறழ்ந்தும் போயிருக்கின்றன.

நிலந்தவ வுருட்டிய நேமி யோருஞ்
சமங்கண் கூடித் தாம்வேட் பவ்வே
(ரு) நறுவிரை துறந்த நாறா நரைத்தலைச்
சிறுவர் தாயே பேரிற் பெண்டே
நோகோ யானே நோக்குமதி நீயே
மறப்படை நுவலு மரிக்குரற் றண்ணுமை
யின்னிசை கேட்ட துன்னரு மறவர்
(கO) வென்றி தருவேட் கையர் மன்றங் கொண்மார்
பேரம ருழந்த வெருவரு பறந்தலை
விழுநவி பாய்ந்த மரத்தின்
வாண்மிசைக் கிடந்த வாண்மை யோன்றிறத்தே.

திணை - கரந்தை; துறை - கையறுநிலை.
கண்டீர் தாய்க்குச்சொல்லியது.
கழாத்தலையார்.

(உஎO)

(உஎக.) நீரற வறியா நிலமுதற் கலந்த
கருங்குர னொச்சிக் கண்ணார் குவவுத்தழைத்
மெல்லிழை மகளி ரைதக லல்குற்
றொடலை யாகவுங் கண்டன மினியே
(ரு) வெருவரு குருதியொடு மயங்கி யுருவுகரந்
தெற்றுவாய்ப் பட்ட தெரிய லூரான்
செத்துப் பருந்துண் டுவப்ப யாங்கண் டனமே
மறம்புகன் மைந்தன் மலைந்த மாறே.

திணை - நொச்சி; துறை - செருவிடைவீழ்தல்.
வெறிபாடிய காமக்கண்ணியார்.

(உஎக)

(உஎஉ.) மணிதுணர்ந் தன்ன மாக்குர னொச்சி
போதுவிரி பன்மர னுள்ளுஞ் சிறந்த
காதன் னன்மர நீமற் றிசினே
கடியுடை வியனகர்க் காண்வரப் பொலிந்த
(ரு) தொடியுடை மகளி ரல்குலுங் கிடத்தி
காப்புடைப் புரிசை புக்குமா றழித்தலின்
ஊர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
பீடுகெழு சென்னிக் கிழமையு நினதே.

திணையும் துறையும் அவை.
மோசிசாத்தனார்.

(உஎஉ)

(உஎங.) மாவா ராதே மாவா ராதே
எல்லார் மாவும் வந்தன வெம்மிற்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் றந்த
செல்வ னூரு மாவா ராதே
இருபே ரியாற்று மொருபெருங் கூடல்
விலங்கிடு பெருமரம் போல
வுலந்தின்று கொல்லவன் மலைந்த மாவே.

திணை - தும்பை; துறை - குதிரைமறம்.
எருமைவெளியனார். (உஎங)

(உஎச.) நீலக் கச்சைப் பூவா ராடைப்
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல்வருங் களிறொடு வேலொழிந் தினியே
தன்னுந் துரக்குவன் போலு மொன்னலர்
எஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்
கையின் வாங்கித் தழீஇ
மொய்ம்பி னூக்கி மெய்க்கொண் டனனே.

திணை - அது; துறை - எருமைமறம்.
உலோச்சனார். (உஎச)

(உஎரு.) கோட்டங் கண்ணியுங் கொடுந்திரை யாடையும்
வேட்டது சொல்லி வேந்தனைத் தொடுத்தலு
மொத்தன்று மாதோ விவற்கே செற்றிய
திணிநிலை யலறக் கூழை போழ்ந்துதன்
வடிமா ணெஃகங் கடிமுகத் தேந்தி
யோம்புமி னோம்புமி னிவணென வோம்பாது
தொடர்கொள் யானையிற் குடர்கால் தட்பக்
கன்றமர் கறவை மான
முன்சமத் தெழுந்ததன் றோழற்கு வருமே.

திணையும் துறையும் அவை.
ஒரூஉத்தனார். (உஎரு)

(உஎசு.) நறுவிரை துறந்த நரைவெண் கூந்த
லிரங்கா ழன்ன திரங்குகண் வறுமுலைச்
செம்முது பெண்டின் காதலஞ் சிறாஅன்
குடப்பாற் சில்லுறை போலப்
படைக்குநோ யெல்லாந் தானா யினனே.

திணை - அது; துறை - தானைநிலை.
மதுரைப்பூதனிளநாகனார். (உஎசு)

(௩)திரிந்த வாய்வா டிருத்தாத்
(௪)தனக்கிரிந் தானைப் பெயர்புற ஙகுமே.

திணையும் துறையும் அவை.

ஓரம்போகியார். (உ௮௪)

க. சூட்டி. உ. பிறையாக. ௩. திருந்த. ௪. தனக்கிருந்தானை.

(உ௮௫.) பாசறை யீரே பாசறை யீரே!
1.2 துடியன் கையது வேலே யடிபுணர்
3 வாங்கிரு மருப்பிற் றீந்தொடைச் சீறியாழ்ப்
4 பாணன் கையது தோலே காண்வரக்
(௫) கடுந்தெற்று மூடையின் ............
6 வாடிய மாலை மலைந்த சென்னியன்
7 வேந்துதொழி லயரு மருந்தலைச் சுற்றமொடு
8 நெடுநகர் வந்தென விடுகணை யொசித்த
9 (க)மூரிவெண் டோள் ..................
௧0) சேறுபடு குருதிச் செம்மலுக் கோஒ
11 (உ)மாறுசெறு நெடுவேன் மார்புளம் போக
12 நிணம்பொதி கழலொடு நிலஞ்சேர்ந் தனனே
13 அதுகண்டு, (௩)பரந்தோ ரெல்லாம் புகழத் தலைபணிந்
14 திறைஞ்சி யோனே குரிசில் பிறங்குகதிர்
௧௫) நல்மருங் கழனித் தண்ணடை யொழிய
16 (௪)இல்லம்பா டொக்கற் றலைவற்கோர்
17 கரம்பைச் சீறூர் நல்கின னென்னவே.

திணை - வாகை; துறை - ........ முல்லை-

அரிசில்கிழார். (உ௮௫)

க. மூரிவெண்டோல். உ. மாறுபடுநெடு. ௩. பார்த்தோர். ௪. வலம்பாடு.

(உ௮௬.) வெள்ளை வெள் யாட்டுச் செச்சை போலத்
1.2 தன்னோ ரன்ன விளைய ரிருப்பப்
3 பலர்மீது நீட்டிய மண்டை (க)யென் சிறுவனைக்
4 கால்கழி கட்டி லிற் கிடப்பித்
(௫) தூவெள் ளறுவை (உ)போர்ப்பித் திலதே.

திணை - தும்பை; துறை - வேத்தியல்.

ஔவையார். (உ௮௬)

க. என். உ. போர்ப்பித்திலவே.
போர்ப்பித்திலனே.

(உ௮எ.) துடியெறியும் புலைய
வெறிகோல் கொள்ளு மிழிசின
கால மாரியி னம்பு தைப்பினும்
வயற்கெண்டையின் வேல்பிறழினும்
௫ பொலம்புனை யோடை யண்ணல் யானை
யிலங்குவான் மருப்பி னுதிமடுத் தூன்றினும்
ஓடல் செல்லாப் பீடுடை யாளர்
நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் (க)புரளுந்
க0 தண்ணடை பெறுதல் யாவது படினே
மாசின் மகளிர் (உ)மன்ற னன்றும்
உயர்நிலை யுலகத்து நுகர்ப வதனால்
வம்ப வேந்தன் றானை
இம்பர் நின்றுங் காண்டிரோ வரவே.

திணை - கரந்தை ; துறை - நீண்மொழி.

சாத்தந்தையார். (உ௮எ)

க. பிறழுங். உ. மண்ணுநன்று.

(உ௮௮.) மண்கொள வரிந்த வைந்நுதி மருப்பி
னண்ணல் நல்லே றிரண்டுடன் மடுத்து
வென்றதன் பச்சை சீவாது போர்த்த
திண்பிணி முரச மிடைப்புலத் திரங்க
௫ ஆரமர் மயங்கிய ஞாட்பிற் றெறுவர
நெடுவேல் பாய்ந்த நாணுடை நெஞ்சத்
(க)தருகுகை ......... ......... மன்ற
குருதியொடு துயல்வரு மார்பின்
முயக்கிடை யீயாது மொய்த்தன பருந்தே.

திணை - தும்பை, துறை - மூதின்முல்லை.

கழாத்தலையார். (உ௮௮)

க. தருகுறை.

(உ௮௯.) ஈரச் செவ்வியு......... .........
......... ......... .........கிளைஞ
நல்லெருது நோக்கி வீறு.........
வேறல் வரியு முழவன் போலப்
௫ பாடுபெறு தொல்குடிப் பாடுபல தாங்கிய

290 — 292.



6 மூதிலாளருள்ளுங் காதலிற்
7 றனக்குமுகந் தேந்திய ப......... .........
8 ......... ......து மறவுமொன் றிலனே
9 கேட்டியோ வாழி பாண பாசறைப்
10 பூக்கோ ளின்றென் றறையு
11 மடிவாய்த் தண்ணுமை யிழிசினன் குரலே.

திணை - ......... .........; துறை - ......முல்லை

கழாத்தலையார். (உ அகூ)

(உகூ0.) இவற்கீத் துண்மதி கள்ளே சினப்போ
2 ரினக்களிற் றியானை யியறேர்க் குருசி
3 னுந்தை தந்தைக் கிவன்றந்தை தந்தை
4 யெடுத்தெறி ஞாட்பி னிமையான் றச்ச
ரு) னடுத்தெறி குறட்டி னின்றுமாய்ந் தனனே!
6 மறப்புகழ் நிறைந்த மைந்தினோ னிவனு
7 முறைப்புழி யோலை போல
8 மறைக்குவன் பெரும நிற் குறித்துவரு வேலே.

திணை - காஞ்சி; துறை - மூதின்முல்லை.

ஔவையார். (உகூ0)

(உகூக.) சிறாஅர் துடியர் பாடுவன் மகாஅர்
2 தூவெள் ளறுவை மாயோற் குறுகி
3 (க) யிரும்புட் பூச லோம்புமின் யானும்
4 விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவெ
ரு) னென்போற் பெருவிதுப் புறுக வேந்தே
6 கொன்னுஞ் சாதல் வெய்யோற்குத் தன்றலை
7 மணிமருண் மாலை சூட்டி யவன்றலை
8 யொருகாழ் மாலை தான்மலைந் தனனே!

திணை - காஞ்சி; துறை - வேத்தியல்.

நெடுங்கழுத்துப்பரணர். (உகூக)

க. இரும்புட்பூசல்.

(உகூஉ.) வேந்தற் கேந்திய தீந்தண் ண......
2 ......... தனக்குமுறை வளாவ விலக்கி
3 வாய்வாள் பற்றி நின்றனன் என்று
4 சினவ லோம்புமின் சிறுபுல் லாளர்
ரு) ஈண்டே போல வேண்டுவ னாயின்

ளென்முறை வருக வென்னான் கம்மென
வெழுதரு பெரும்படை விலக்கி
யாண்டு நிற்கு மாண்டகை யன்னே.

திணை - வஞ்சி; துறை - பெருஞ்சோற்றுநிலை.

விரிச்சியூர் நன்னாகனார். (உ௯உ)

(உ௯௩.) (க) நிறப்புட கொல்லை யானைமேலோன
குறும்பறை கெறியு மோவற் றணனுமை
நாணுடை மாக்கட் கிரங்கு மாயின்
(உ) னெம்பிறும் பேரெழி லிழந்து வினையெனப்
பிறர்மனை புகுவர் கொல்லோ
வளியட் டானே பூவிலைப் பெண்டே.

திணை - காஞ்சி; துறை - பூக்கோட்காஞ்சி.

நொச்சிநியமங்கிழார். (உ௯௩)

க. நிறப்புடகொல்லைமெலொனதுவம்பறகெறியு. உ. னெமபிறும.

(உ௯ச.) வெண்குடை மதிய மேனிலாத் திகழ்தரக்
(க) கண்கூடி யாத்த கடன்மருள் பாசறைக்
குமரிப்படை (உ) தழீஇய கூற்றுவினை யாடவர்
தம்பி (௩) ரறியா வமர்மயங் கழுவத்
திறையும் பெயருந் தோற்றி நுமருள்
நாண்முறை தபுத்தீர் வம்மி னீங்கெனப்
போர்மலைந் (ச) தொருசிறை நிற்ப யாவரும்
அரவுமிழ் மணியிற் குறுகார்
(ரு) நிரைதார் மார்பினின் கேள்வனைப் பிறரே.

திணை - தும்பை; துறை - தானைமறம்.

பெருந்தலைச்சாத்தனார். (உ௯ச)

க. கண்கூடிறுத்த. ௩. அறியாதமர். ரு. விரைகாழ்மாலையெங் கேள்வனை.
உ. தழீஇக். ச. ஒருதிறநிற்ப.

(உ௯ரு.) கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்
வெந்துவாய் மடித்து வேறுலைப் (க) பெயரித்
(உ) தோடுகைத் தெழுதருந் (௩) தரங்கேறி ஞாட்பின்
வருபடை போழ்ந்து வாய்ப்பட விலங்கி
யிடைப்படை யழுவத்துச் சிதைந்துவே றாகிய
சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி

வாடுமுலை யூறிச் சுரந்தன
வோடாப் பூட்கை விடலை தாய்க்கே.

திணை - தும்பை; துறை - உவகைக்கலுழ்ச்சி.

ஔவையார். (உகரு)

க. பெயரந். உ. தொழுகைத். ௩. தாங்கெதிர்.

(உகசு.) வேம்புசினை யொடிப்பவுங் காஞ்சி பாடவு
நெய்யுடைக் கையர் ஐயவி புகைப்பவு
மெல்லா மனையுங் கல்லென் றனவே;
வேந்துடன் றெறிவான் கொல்லோ?
(௫) நெடிதுவந் தன்றா னெடுந்தகை தேரே

திணை - வாகை; துறை - ஏறாண்முல்லை

வெள்ளைமாளர். (உகசு)

(உகஎ.) பெருநீர் மேவற் றண்ணடை யெருமை
யிருமருப் புறழு நெடுமா (க) நெற்றின்
பைம்பயறு துதிர்த்த கோதின் கோலணைக்
கன்றுடை மரையா துஞ்சுஞ் சீறூர்க்
(௫) கோளிவண் வேண்டேம் புரவே (உ) நாரரி
(௩) நனைமுதிர் சாடி நறவின் வாழ்த்தித்
துறைநனி கெழீஇக் கம்புள் ளீனுந்
தண்ணடை பெறுதலு முரித்தே (௪) வைந்நுதி
நெடுவேல் பாய்ந்த மார்பின்
௧௦) மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே.

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு.

.................. ......... ......... ......... (உகஎ)

க. நெற்றின். உ. நாரி. ௩. நிறைமுதிர். ௪. வைந்நுனை.

(உகஅ.) எமக்கே கலங்க றருமே தானே
தேற லுண்ணு மன்னே நன்று
மின்னான் மன்ற வேந்தே யினியே,
நேரா ராரெயின் முற்றி வாய்மடித்
(௫) ........ ......... ரநீமுந் தென்னவே.

திணை - கரந்தை; துறை - நெடுமொழி.

*ஆலியார். (உகஅ)

* ஆனியாரென்றும் பிரதிபேதமுண்டு.

(உகூகூ.) பருத்தி வேலிச் சீறூர் மன்னன்
(க)னுழுத்த திருண்ட வோய்நடைப் புரவி
கடன்மண்டு தோணியிற் படைமுகம் போழ
நெய்ம்மிதி யருந்திய கொய்சுவ லெருத்திற்
றண்ணடை மன்னர் தாருடைப் புரவி
யணங்குடை முருகன் கோட்டத்துக்
(உ)கலந்தொடா மகளிரி னிகழ்ந்துநின் றவ்வே.

திணை - நொச்சி; துறை - குதிரைமறம்.
பொன்முடியார். (உகூகூ)

க. உழுத்தருண்ட. உ. கலங்கொடா

(௩00.) தொருஅ தொருஅ வென்றி தோலொடு
துறுகன் மறையினு முய்குவை போலாய்
நெருந லெல்லை நீயெறிந் தோன்றம்பி
யகல்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்
பேரூ ரட்ட கள்ளிற்
(க)கோரிற் கோரிற் றேருமா னின்னே.

திணை - தும்பை; துறை - தானைமறம்.
அரிசில்கிழார். (௩00)

க. கோரிற்கோயிற்.

(௩0க.) பல்சான் றீரே பல்சான் றீரே
குமரி மகளிர் கூந்தல் புரைய
வமரி னிட்ட வருமுள் வேலிக்
கல்லென் பாசறைப் பல்சான் றீரே
(ரு) முரசுமுழங்கு (க)தானைநு மரசு மோம்புமி
னொளிறேந்து மருப்பினுங் களிறும் போற்றுமி
னெனைநாட் (உ)டங்குநும் போரே யனைநா
ளெறியர் (௩)றெறிதல் யாவண (ச)தெறிந்தோ
ரெதிர்சென் றெறிதலுஞ் (ரு)செல்லா னதனா
(கo) லறிந்தோர் யாரவன் கண்ணிய பொருளே
பலமென் றிகழ்த லோம்புமி னுதுக்கா
ணிலனளப் பன்ன நில்லாக் குறுநெறி
வண்பரிப் புரவிப் பண்புபா ராட்டி
யெல்லிடைப் படர்தந் தோனே கல்லென
(கரு) வேந்தூர் யானைக் கல்ல
தேந்துவன் (௬)போலான்ற னிலங்கிலை வேலே.

3.02—3.04.



திணையும் துறையும் அவை.

ஆவூர்மூலங்கிழார். (௩௦௧)

க. நூழையு. உ. தானு. ௩. அறிதல். ச. அறிந்தோன். ௫. செல்லாது. ௬. போலானி.

(௩௦௨.) வெடிவேய் கொள்வது போல வோடித்
2 (க)தாவு புகளு மாவே பூவே
3 விளங்கிழை மகளிர் கூந்தற் கொண்ட
4 நரந்தப் பல்காழ்க் கோதை (உ)சுற்றிய
௫ வைதமை பாணி வணர்கோட்டுச் சீறியாழ்க்
6 கைவார் நரம்பின் பாணர்க் கோக்கிய
7 சிரம்பா வியலிற் கரம்பைச் சீறூர்
8 நோக்கினர்ச் செகுக்குங் காளை (௩)யூக்கி
9 (ச)வேலி னட்ட களிறு பெயர்த் தெண்ணின்
௧௦ விண்ணிவர் விசும்பின் மீனுந்
11 தண்பெய லுறையு முறையா றுவே.

திணை - அது; துறை - குதிரைமறம்.

வெறிபாடிய காமக்கண்ணியார். (௩௦௨)

க. தாவுவுகளு. உ. சுற்றியதைம. ௩. ஊக்கு. ச. வேலினிட்ட.

(௩௦௩.) நிலம்பிறக் கிடுவது போறகுளம்பு கடையூ
2 வுள்ள மொழிக்குங் கொட்பின் மான்மே
3 லெள்ளுநர்ச் செகுக்குங் காளை கூர்த்த
4 வெந்திற லெஃகி நெஞ்சுவடு விளைப்ப
௫ வாட்டிக் காணிய வருமே நெருநை
6 யுரைசால் சிறப்பின் (க)வேந்தர் முன்னர்க்
7 கரைபொரு முன்னிரத் (உ)திரையிற் போழ்ந்தவர்
8 கயந்தலை மடப்பிடி புலம்ப
9 விலங்குமருப் பியானை யெறிந்த வெற்கே.

திணையும் துறையும் அவை.

எருமைவெளியனார். (௩௦௩)

க. வேந்தன். உ. திரைவிற்.

(௩௦௪.) கொடுங்குழை மகளிர் கோதை சூடி
2 நடுங்கு (க)பனிக் களைஇயர் நாரரி பருகி
3 வளிதொழி லொழிக்கும் வண்பரிப் புரவி
4 பண்ணற்கு விரைதி நீயே நெருநை
௫ யெம்முற் றப்பியோன் றம்பியொ டோராங்கு

8 வாழா வன்பகை யேப்பத் (உ) தெறுவர்
9 (௩) பேருயிர் கொள்ளு மாதோ வதுகளத்
௧௦ நெஞ்சலிற் சிறந்தது பிறிதொன் றில்லெனப்
11 பண்கொளற் கருமை நோக்கி
12 நெஞ்சற வீழ்ந்த புரைமை யோனே.

திணை - தும்பை; துறை - ..........
.......................................... (௩0எ)

௧. மன்ற. உ. தெறுவரப. ௩. பெருயிர்க்கொ

(௩0அ.) பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
2 மின்னேர் பச்சை மிஞிற்றுக் குரற் சீறியாழ்
3 நன்மை நிறைந்த நயவரு பாண !
4 சீறூர் மன்னன் சிறியிலை யெஃகம்
(௫) வேந்தூர் யானை யேந்துமுகத் ததுவே
6 வேந்துடன் றெறிந்த வேலே யென்னை
7 சாந்தா ரகல முளங்கழிந் தன்றே !
8 உளங்கழி சுடர்ப்படை யேந்திநம் பெருவிறல்
9 ஓச்சினன் றுரந்த காலை மற்றவன்
௧௦ புன்றலை மடப்பிடி நாணக்
11 குஞ்சர மெல்லாம் புறக்கொடுத் தனவே.

திணை - வாகை; துறை - மூதின்முல்லை.
கோவூர்கிழார். (௩0அ)

(௩0௯.) இரும்புமுகஞ் சிதைய நூறி யொன்னார்
2 இருஞ்சமங் கடத்த லேனோர்க் கெளிதே
3 நல்லரா வுறையும் புற்றம் போலவுங்
4 கொல்லேறு திரிதரு மன்றம் போலவும்
(௫) மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை
6 உளனென வெரூஉ மோரொளி
7 வலனுயர் நெடுவே லென்னைகண் ணதுவே.

திணை - தும்பை; துறை - நூழிலாட்டு.
மதுரையிளங்கண்ணிக் கௌசிகனார். (௩0௯)

(௩௧0.) பால்கொண்டு மடுப்பவு முண்ணா னாகலிற்
2 செறாஅ தோச்சிய சிறுகோ லஞ்சியொ
3 டுயவொடு வருந்து மனனே யினியே ......
4 புகர்நிறங் கொண்ட களிறட் டானான்
(௫) முன்னாள் வீழ்ந்த உரவோர் மகனே

310-314



6 யுன்னில னென்னும் புண்ணொன் றம்பு
7 மானுளை யன்ன குடுமித்
8 தோன்மிசைக் கிடந்த புல்லண லோனே.

திணையும் துறையும் அவை.
பொன்முடியார். (௩௧௦)

(௩௧௧.) களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
2 புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை
3 தாதெரு மறுகின் மாசுண விருந்து
4 பலர்குறை செய்த மலர்தா ரண்ணற்
௫ கொருவரு மில்லை மாதோ செருவத்துச்
6 சிறப்புடைச் செங்கண் புகையவோர்
7 தோல்கொண்டு மறைக்குஞ் சால்புடை யோனே.

திணை - அது; துறை - பாடாண்பாட்டு.
ஔவையார். (௩௧௧)

(௩௧௨.) ஈன்று புறந்தருத லென்றலைக் கடனே
2 சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
3 வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
4 நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
௫ யொளிறுவா ளருஞ்சமம் முருக்கிக்
6 களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.

திணை - வாகை; துறை - மூதின்முல்லை.
பொன்முடியார். (௩௧௨)

(௩௧௩.) அத்தஞ் நண்ணிய நாடுகெழு பெருவிறல்
2 கைப்பொருள் யாதொன்று மிலனே கச்சிக்
3 காணிய சென்ற விரவன் மாக்கள்
4 களிற்றொடு நெடுந்தேர் வேண்டினுங் கடல
௫ வுப்போகாச் சாகாட் டுமணர் காட்ட
6 கழிமுரி குன்றத் தற்றே
7 யெள்ளமை வின்றவ னுள்ளிய பொருளே.

திணை - அது; துறை - வல்லாண்முல்லை.
மாங்குடிகிழார். (௩௧௩)

(௩௧௪.) மனைக்கு விளக்காகிய வாணுதல் கணவன்
2 முனைக்கு வரம்பாகிய வென்வே னெடுந்தகை
3 நடுகற் பிறங்கிய வுவலிடு பறந்தலைப்
4 புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்

314—317



(ரு) குடியுமன்னுந் தானே கொடியெடுத்து
6 (க) நிறையழிந் தெழுதருந் தானைக்குச்
7 சிறையுந் தானே தன்னிறைவிழு முறினே.

திணையும் துறையும் அவை.
ஐயூர்முடவனர். (நூகச)

க. நிறையழிந்து.

(நூகரு.) உடையன் னாயி னுண்ணவும் வல்லன்
2 கடவர் மீது இரப்போர்க் கீயும்
3 மடவர் மகிழ்துணை நெடுமா னஞ்சி
4 இல்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
(ரு) தோன்றா திருக்கவும் வல்லன் மற்......
6 ......... ......... கனையெரி போலத்
7 தோன்றவும் வல்லன்றான் றோன்றுங் காலே.

திணையும் துறையும் அவை.
நெடுமானஞ்சியை ஔவையார். (நூகரு)

(நூகசு.) கள்ளின் வாழ்த்திக் கள்ளின் வாழ்த்திக்
2 காட்டொடு மிடைந்த சீயா முன்றி
3 னாட்செருக் (க) கணந்தந் துஞ்சு வோனே
4 யவனெம் இறைவன் யாமவன் பாணர்
(ரு) நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்தன்
6 னிரும்புடைப் பழவாள் வைத்தன னின்றிக்
7 கருங்கோட்டுச் சீறியாழ் பணையம் இதுகொண்
8 டீவதி லாள னென்னாது நீயும்
9 வள்ளி மருங்குல் வயங்கிழை யணியக்
கo கள்ளுடைக் கலத்தேம் யாமகிழ் தூங்கச்
11 (உ) சென்றுவாய் சிவந்துமேல் வருக
12 சிறுகண் யானை வேந்துவிழு முறவே.

திணையும் துறையும் அவை.
மதுரைக்கள்ளிற்கடையத்தன் வெண்ணாகனர். (நூகசு)

க. கள்ளுநரத்துஞ்சு. உ. செறுவர்சிவந்து. செறுநர்சிவந்து.

(நூகஎ.) வெ......... ......... ......... நது
2 முன்றிற் கிடந்த பெருங்களி யாளர்க்
3 கதனுண் டாயினும் பாயுண் டாயினும்
4 யாதுண் டாயினுங் கொடுமின் வல்லே

(கூ உ0.) முன்றில் முஞ்ஞையொடு முசுண்டை பம்பிப்
பந்தர் வேண்டாப் பலர்தூங்கு நீழற்
கைம்மான் வேட்டுவன் கனைதுயின் மடிந்தெனப்
பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்
(ரு) தீர்தொழிற் றனிக்கலை திளைத்துவிளை யாட
இன்புறு புணர்நிலை கண்ட மனையோள்
கணவ னெழுதலு மஞ்சிக் கலையே
பிணைவயிற் றீர்தலு மஞ்சி யாவதும்
இல்வழங் காமையிற் கல்லென வொலித்து
(க0) மான்கட் பெய்த வுணங்குதினை வல்சி
கானக் கோழியொ டிதல்கவர்ந் துண்டென
வார நெருப்பி னார னாறத்
தடிவார்ந் திட்ட முழுவள் ளூரம்
இரும்பே ரொக்கலொ டொருங்கினி தருந்தித்
(கரு) தங்கினை சென்மோ பாண! தங்காது
வேந்துதரு விழுக்கூழ் பரிசிலர்க் கென்றும்
அருகா தீயும் வண்மை
உரைசா னெடுந்தகை யோம்பு மூரே.

திணையும் துறையும் அவை.

வீரை வெளியனார். (கூ உ0)

(கூ உ க.) பொறிப்புறப் பூழின் போர்வல் (க) சேவன்
மேந்தோல் களைந்த தீங்கொள் வெள்ளெட்
களகிடைப் புணங்கற் செவ்வி கொண்டென
வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன
(ரு) குடந்தைய செவிய கோட்டெலி யாட்டக
கலியார் வரகின் பிறங்குபீ டொளிக்கும்
வன்புல வைப்பி னதுவே சென்று
தின்பழம் பசீஇ ............னனோ பாண!
வாள்வடு விளங்கிய சென்னிச்
(க0) செருவெங் குரிசி லோம்பு மூரே

திணையும் துறையும் அவை.

உறையூர் மருத்துவன் தாமோதரனார். (கூ உ க)

க. செலவன்.

(கூ உ உ.) (க) உழு...... ...........................னன்
கவைமுட் கள்ளிப் பொரியரைப் பொருந்திப்

திணையும் துறையும் அவை.
ஆலத்தூர்கிழார். (௩௨௪)

௧. வேட்டுவன். ௨. மறுகுவாய். ௩. காய. ௪. வன்காழ்ப்பந்தர்.

(௩௨௫.) களிறுநீ றாடிய விடுநில மருங்கின்
வம்பப் பெரும்பெயல் வறந்துசொரிந் திறந்தெனக்
குழிகொள் சின்னீர் குராஅ லுண்டலிற்
செறுகிளைத் திட்ட கலுழ்கண் ணூறன்
௫ முறையி னுண்ணு நிறையா வாழ்க்கை
முளவுமா தொலைச்சிய முழுச்சொ லாடவர்
உடும்புழு தறுத்த (௧)வொடுங்காழ்ப் படலைச்
சீறின் முன்றிற் கூறுசெய் திடுமார்
கொள்ளி வைத்த கொழுநிண நாற்றம்
௧௦ மறுகுடன் கமழு மதுகை மன்றத்
தலந்தலை யிரத்தி யலங்குபடு நீழற்
கயந்தலைச் சிறாஅர் கணைவிளை யாடும்
(௨)அருமிளை யிருக்கைய தேவே வென்வேல்
வேந்துதலை வரினுந் தாங்கும்
௧௫ தாங்கா வீகை நெடுந்தகை யூரே.

திணையும் துறையும் அவை.
உறையூர் முதுகண்ணன் சாத்தனார். (௩௨௫)

௧. கொடுங்காழ். ௨. அருமிளை.

(௩௨௬.) ஊர்முது வேலிப் பார்நடை வெருகின்
இருட்பகை வெரீஇய நாகிளம் பேடை
உயிர்நடுக் குற்றுப் புலாவிட் டரற்றச்
சிறையுஞ் செற்றையும் புடையுந ளெழுந்த
௫ பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்துக்
கவிர்ப்பூ நெற்றிச் சேவலிற் றணியும்
அருமிளை யிருக்கைய துவே மனைவியும்
வேட்டச் சிறாஅர் சேட்புலம் படராது
படமடைக் கொண்ட குறுந்தா ளுடும்பின்
௧௦ விழுக்குநிணம் பெய்த தயிர்க்கண் விதவை
யாணர் நல்லவை பாணரொ டொராங்கு
வருவிருந் தயரும் விருப்பினள் கிழவனும்
அருஞ்சமந் ததையத் தாக்கிப் பெருஞ்சமத்

தண்ணல் யானை யணிந்த
௧௫ பொன்செய் யோடைப் பெரும்பரி சிலனே.

திணையும் துறையும் அவை.
*தங்கால் பூட்கோவலனார். (௩உ௬)

(௩உ௭.) எருது காலுறா திளைஞர் கொன்ற
(க)சில்வினை வரகின் புல்லென் குப்பை
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த பாண ருண்டுகடை தப்பலின்
௫ ஒக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்
சிறுபுல் லாளர் முகத்தவை கூறி
(உ)வரகுகட னிரக்கு நெடுந்தகை
யரசுவரிற் றுங்கும் வல்லா ளன்னே.

திணையும் துறையும் அவை.
........................... (௩உ௭)

க. சில்வினை. உ. வரகுகடனீர்க்கு.

(௩உ௮.) ........டைமுதற் புறவுசேர்ந் திருந்த
புன்புலச் சீறூர் நெல்விளை யாதே
வரகுந் தினையு முள்ளவை யெல்லாம்
மிரவன் மாக்களுக் கீயத் தொலைந்தன
௫ ..............................டமைந் தன்னே
பன்னா ளயினும் பாணர் நன்றும்
வெள்ளத் திடும்பா லுள்ளுறை தொட.....
களவுப் புளியன்ன விளை..................
........................................வாடுன் குறை
௧௦ கொய்குர லரிசியொடு நெய்பெய் தட்டுத்
துடுப்பொடு சிவணிய களிக்கொள் வெண்சோ
றுண்டினி திருந்த பின்.....................
.......................................குவன் மாதோ
தாளி முதல் நீடிய சிறுநறு முஞ்ஞை
௧௫ முயல்வந்து கறிக்கு முன்றிற்
சீறூர் மன்னனைப் பாடினை செலினே.

திணையும் துறையும் அவை.
........................... (௩உ௮)

(௩உ௯.) இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
புடைநடு கல்லி னாட்பலி யூட்டி

* தங்கால் தாட்கோவலனாரென்றும் பிரதிபேதமுண்டு.

(க)நன்னீ ராட்டி நெய்ந்நறைக் கொளீஇ
மங்குன் மாப்புகை மறுகுடன் கமழும்
(ரு) மருமனை யிருக்கைத் தாயினும் வரிமிடற்
றரவுறை புற்றத் தற்றே நாளும்
புரவலர் புன்கண் ணோக்கா திரவலர்க்
கருகா தீயும் வண்மை
யுரைசா னெடுந்தகை யோம்பு மூரே.

திணையும் துறையும் அவை.
மதுரை அறுவைவாணிகனிளவேட்டனார். (கூஉகூ)

க. நன்னராட்டி.

(கூகூ0.) வேந்துடைத் தானை முனைகெட நெரிதலி
னேந்துவா ளவலத்த னொருவ னாகித்
தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற்
காழி யனையன் மாதோ வென்றும்
(ரு) பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்
புரவிற் காற்றாச் சீறூர்த்
தொன்மை சுட்டிய வண்மை யோனே.

திணையும் துறையும் அவை.
மதுரைக்கணக்காயனார். (கூகூ0)

(கூகூக.) கல்லுறத் தியற்றிய வல்லுவர்க் கூவல்
வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி
நனிநல் கூர்ந்தன னாயினும் பனிமிக்
புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியுங்
(ரு) கல்லா விடையன் போலக் குறிப்பின்
இல்லது படைக்கவும் வல்ல னுள்ளது
தவச்சிறி தாயினு மிகப்பல ரென்னான்
(க) நீணெடும் (உ) பந்த ரூண்முறை யூட்டு
மிற்பொலி மகடூஉப் போலச் சிற்சில
க0 வரிசையி னளிக்கவும் வல்ல னுரிதினிற்
கோவன் மன்னர் கடைமுகத் துகுக்கும்
போகுபலி வெண்சோறு போலத்
தூவவும் வல்லனவன் றூங்குங் காலே.

திணையும் துறையும் அவை.
உறையூர் முதுகூத்தனார். (கூகூக)

க. நீணெடு. உ. பந்தருண்.

(ஙஙஉ.) பிறர்வேல் போலா தாகி யிவ்வூர்
மறவன் வேலோ பெருந்தகை யுடைத்தே
(க)யிரும்புற (உ)நீறு மாடிக் (ங)கலந்திடைக்
குரம்பைக் கூரை கிடக்கினுங் கிடக்கும்
(ரு) மங்கல மகளிரொடு மாலை சூட்டி
யின்குரல் (ச)விசும்பை (ரு)யாழொடு ததும்பத்
தெண்ணீர்ப் படுவினுந் தெருவினுந் திரிந்து
மண்முழு தழுங்கச் செல்லினுஞ் (சு)செல்லுமாங்
கிருங்கட் றானை வேந்தர்
க0) பெருங்களிற்று முகத்தினுஞ் செலவா னதே!

திணையும் துறையும் அவை.
விரியூர்நக்கனர்.

க. இரும்புக. ங. கலத்திடை. ரு. யாழெடுத்தியம்ப
உ. நீரு. ச. இரும்பை. சு. செல்லுங்கண்ணுறின்.

(ஙஙங.) நீருட் பட்ட மாரிப் பேருறை
மொக்கு ளன்ன பொகுட்டுவிழிக் கண்ண
கரும்பிடர்த் தலைய பெருஞ்செவிக் குறுமுயல்
உள்ளூர்க் குறும்புதற் றுள்ளுவன வுகளுந்
ரு) தொள்ளை மன்றத் தாங்கட் படரின்
உண்டென வுண்ணா ருயவிற் றாயினுந்
தங்கினிர் சென்மோ புலவிர் நன்றுஞ்
சென்றதற் கொண்டு மனையோள் விரும்பி
வரகுந் தினையு முள்ளவை யெல்லா
க0) மிரவன் மாக்க ளுணக்கொளத் தீர்ந்தெனக்
குறித்துமா றெதிர்ப்பை பெறாஅ மையிற்
குரலுணங்கு விதைத்தினை யுரல்வாய்ப் பெய்து
சிறிதுபுறப் பட்டன்றோ விலளே தன்னூர்
வேட்டக் குடிதொறுங் கூட்டு..........
கரு) .......... உடும்புசெய்
பாணி நெடுந்தேர் வல்வ ரோடு
வம்பணி யானை வேந்துதலை வரினும்
உண்டு மன்னு மதுவே
பரிசில் மன்னுந் துரிசில்கொண் டதுவே.

திணையும் துறையும் அவை.

.....................................

(ஙஙங)

9 தானே விறன்மலை ........
௧0 வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின்
11 முகைவனப் பேந்திய முற்றா விளமுலைத்
12 தகைவளர்த் தெடுத்த நகையொடு
13 பகைவளர்ந் திருந்தவிப் பண்பி றாயே.

திணை - காஞ்சி; துறை - மகட்பாற்காஞ்சி.
பரணர்.

(௩௩௭) ஆர்கலி யினனே சோணாட் டண்ணல்
2 கவிகை மண்ணாள் செல்வ ராயினும்
3 வாள்வலந் தொழியப் பாடிச் சென்றார்
4 வாரேறு கமலா ........
௫ வீதலாணு விலங்குதொடித் தடக்கைப்
6 பாரி பறம்பிற் பனிச்சுனை போலக்
7 காண்டற் கரிய ளாகி மாண்ட
8 பெண்மை நிறைந்த பொலிவொடு மண்ணிய
9 துகில்விரி கடுப்ப நுடங்கித் தண்ணென
௧0 வகிலார் நறும்புகை யைதுசென் றடங்கிய
11 கபில நெடுநகர்க் கமழு நாற்றமொடு
12 மனைச்செறிந் தனளே வாணுத லினியே
13 யற்றன் றாகலிற் றெற்றெனப் போற்றிக்
14 காய்நெற் கவளந் தீற்றிக் காவுதொறுங்
௧௫ கடுங்கண் யானை காப்பன ரன்றி
16 வருதலானார் வேந்தர் தன்னையர்
17 பொருசமங் கடந்த வுருகெழு நெடுவேற்
18 குருதி பற்றிய வெருவரு தலையர்
19 மற்றிவர் மறனு மிற்றாற் றெற்றென்
௨0 யாரா குவர்கொ றாமே நேரிழை
21 யுரித்தல் பல்சுணங் கணிந்த
22 மருப்பிள வனமுலை ஞெமுக்கு வோரே.

திணையும் துறையும் அவை.
கபிலர்.

(௩௩௮) ஏர்பரந்த வயல் நீர்பரந்த செறுவி
2 னென்னெல் மலிந்தமனைப் பொன்மலிந்த மறுகிற்
3 படுவண் டார்க்கும் பன்மலர்க் காவி
4 னெடுவேளாதன் போந்தை யன்ன
௫ பெருஞ்சீ ரருங்கொண் டியளே கருஞ்சினை

வாட்கை வைகலு முழக்கு(ம்)
கரு) மாட்சி யிலரிவ டன்னை மாரே.

திணையும் துறையும் அவை.
அரிசில்கிழார். (ஙசஉ)

(ஙசங.) மீனொடுத்து நெற்குவைஇ
மிசையம்பின மனைமறுக்குந்து
(க)மனைக்குவைஇய கறிமூடையாற்
கலிச்சும்மைய கருந்து
ரு) கலந்தந்த பொற்பரிசங்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
மலைத்தாரமுங் கடற்றாரமுந்
தலைப்பெய்து வருநர்க்கீயும்
புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
க0) முழங்கடன் முழவின் முசுறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்
புரைய ரல்லோர் வரையல ளிவளெனத்
தந்தையுங் கொடாஅ னாயின் வந்தோர்
வாய்ப்பட விறுத்த வேணி யாயிடை
கரு) வருந்தின்று கொல்லோ தானே பருந்துயிர்த்
திடைமதிற் சேக்கும் புரிசைப்
படைமயங் காரிடை நெடுநல் லூரே.

திணையும் துறையும் அவை.
பரணர். (ஙசங)

க. மனைமறுக்குவைஇய.

(ஙசச.) செந்நெ லுண்ட பைந்தோட்டு மஞ்ஞை
செறிவளை மகளி ரோப்பலிற் (க)பறந்தெழுந்து
(உ)துறைநணி மருதத் திறுக்கு மூரொடு
நிறைசால் விழுப்பொருள் தருத லொன்றோ
ரு) புகைபடு கூரெரி பரப்பிப் பகைசெய்து
பண்பி லாண்மை தருத லொன்றோ
விரண்டினு ளொன்றா காமையோ வரிதே
காஞ்சிப் பனிமுறி யாரங் கண்ணி
கணிமே வந்தவ ளல்குலவ் வரியே.

திணையும் துறையும் அவை.
.................. அடைநெடுங்கல்லியார். (ஙசச)

க. பிறந்தெழுந்து. உ. துறைநணி.

(௩௪௫.) களிறணைப்பக் கலங்கினகாஅ
2 தேரோடத்துகள் கெழூமின தெருவும்
3 (க)மாமறுகலின் மயக்குற்றன, வழி
4 கலங்கழாஅலிற், றுறை, கலக்குற்றன
௫ தெறன்மறவ ரிறைகூர்தலிற்
6 பொறைமலிந்து நில்னெளிய
7 வந்தோர் பலரே வம்ப வேந்தர்
8 பிடியுயிர்ப் பன்ன கைகவ ரிரும்பி
9 னோவுற ழிரும்புறங் காவல் கண்ணிக்
௧௦ கருங்கண் கொண்ட நெருங்கல் வெம்முலை
11 மையற் நோக்கிற் றையலை நயந்தோ
12 ரளியர் தாமேயிவ டன்னை மாரே
13 செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி
14 நிரலல் லோர்க்குத் தரலோ வில்லெனக்
௧௫ கழிப்பிணிப் பலகையர் (உ)கதுவாய் வாளர்
16 குழாஅங் கொண்ட குருதியம் புலவொடு
17 கழாஅத் தலைய கருங்கடை நெடுவேல்
18 (௩)வின்ன மிறவர்த் தரினு மின்னோ
19 வென்னா வதுகொ றானே
௨௦ (௪)பன்னல் வேலிப் பணைநல் லூரே?

திணையும் துறையும் அவை.
அவனை அவர்.

(௩௪௫)

க. மாவழங்கலின். ௩. இன்னம்பிறவர்த்தாயினும்.
உ. துறுவாய். ௪. பன்னெல்வேலி.

(௩௪௬.) பிற....................ளபாலென மடுத்தலி ன்
2 னீன்ற தாயோ வேண்டா ளல்லள்
3 கல்வி யென்னும் வல்லாண் சிறாஅ ன்
4 ணெல்வ.....................ரது குடியே
௫ யழிந்தோ ரழிய வொழிந்தோ ரொக்கல்
6 பேணுநரப் பெறாஅது விளியும்
7 புன்றலைப் பெரும்பாழ் செய்யுமிவ ணலனே

திணையும் துறையும் அவை.
அண்டர்மகன்குறுவழுதி.

(௩௪௬)

(௩௪௭.) உண்போன் றான்றுறைகளளிினிடசில
2 நாவிடைப் பஃறேர் கொலச் சிவந்த

3 வெளிறொளவாடக் குழைந்த பைந்தும்பை
4 யெறிந்திலை முறிந்த கதுவா....... .......
ரு மண்ணீறு மார்பின் மறப்போ ரகுதை
6 குண்டுநீர் வரைப்பிற் கூட லன்ன
7 குவையிருங் கூந்தல் வருமு மணநாறு
8 மார்பின் மறப்போ ராலெசபப
9 வென்று வதுகொளுநன் சேந்த
க0 சினைநீர் வளைப்பிற் கூட லன்ன
11 விளங்குழைய வாயினும் வேந்தர்
12 வினைநவில் யானை பிணிப்ப
13 வேர்துளங் கினநம் மூருண் மரனே.

திணையும் துறையும் அவை.
கபிலர். (௩௪௭)

(௩௪அ.) 1 வெண்ணெல் லரிஞர் தண்ணுமை வெரீஇக்
2 கண்ணகன் கொண்ட தீந்தே னிரியக்
3 கள்ளரிக் குங்குயஞ் சிறுமீன் சீவும்
4 பாண்சேரி வாய்மொழித் தழும்பனூ ரன்ன
ரு குவளை யுண்க ணிவளைத் தாயே
6 ஈனா ளாயின ளாயி னானாது
7 நிழற்றொறு நெடுந்தேர் நிற்ப வயின்றொறுஞ்
8 செந்நுதல் யானை பிணிப்ப
9 வருந்தன் மன்னெம் பெருந்துறை மரனே.

திணையும் துறையும் அவை.
பரணர். (௩௪அ)

(௩௪௯.) 1 நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்
2 கடிய கூறும் வேந்தே தந்தையு
3 நெடிய வல்லது பணிந்துமொழி யலனே
4 யிஃதிவர் படிவ மாயின் வையெயிற்
ரு றரிமதர் மழைக்க ணம்மா வரிவை
6 மரம்படு சிறுதீப் போல
7 வணங்கா யினடான் பிறந்த வூர்க்கே.

திணையும் துறையும் அவை.
மதுரை மருதனிளநாகனார். (௩௪௯)

(௩௫0.) 1 தூர்ந்த கிடங்கிற் சோர்ந்த ஞாயிற்
2 சிதைந்த விஞ்சிக் கதுவாய் மூதூர்

யாங்கா வதுகொ லருமனே தாங்காது
படுமழை யுருமி னிரங்கு முரசிற்
ரு கடுமான் வேந்தர் காலை வந்தெந்
நெடுநிலை வாயிற் கொட்குவர் மாதோ
பொருந்தாத் தமருவ ரல்லர் போருழந்
தடுமுரண் முன்பிற் றன்னைய ரேந்திய
கடிவே லெஃகிற் சிவந்த வுண்கட்
க0 டொடிபிறழ் முன்கை யிளையோ
ளணிநல் லாகத் தரும்பிய சுணங்கே.

திணையும் துறையும் அவை.

மதுரையோலைக்கடைக்கண்ணம்புகுந்தாராயத்தனார்.)

(ஙரு0)

(ஙருக.) படுமணி மருங்கின பணைத்தா ளியானையுங்
கொடிநுடங்கு மிசைய தேருமாவும்
படையமை மறவரொடு துவன்றிக் கல்லெனக்
கடல்கண் டன்ன கண்ணகன் றானை
ரு வென்றெறி வேந்த ரென்று மு........
வண்ணகை யெயினன் வாகை யன்ன
விவணலந் தாரா தமைகுவ ரல்லர்
ரென்னா வதுகொ றானே தெண்ணீர்ப்
பொய்கை மேய்ந்த செவ்வரி நாரை
க0 தேங்கொண் மருதின் பூஞ்சினை முனையிற்
காமர்நாஞ்சி..............................
மேமஞ்சால் சிறப்பினிப் பணைநல் லூரே.

திணையும் துறையும் அவை.

மதுரைப்படைமங்கமன்னியார்.

(ஙருக)

(ஙருஉ.) தேஎங்கொண்ட வெண்மண்டையான்
வீ..............................கறக்குந்து
அவல்வகுத்த பசுங்குடையாற்
புதன்முல்லைப் பூப்பறிக்குந்து
ரு ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
குன்றேறிப் புனல்பாயிற்
புனல்வள..............................
..............................நொடைநறவின்
மாவண் டித்தன் வெண்ணெல் வேலி
க0 யுறந்தை யன்ன வுரைசா லன்னலங்
கொடுப்பவுங் கொளாஅ னெ..........

12 .........ர்தந்த நாகிள வேங்கையிற்
13 கதிர்த்தொளி திகழு நுண்பூண் சுணங்கின்
14 மாக்கண் மலர்ந்த முலைய டன்னையுஞ்
கரு) சிறுகோ லுலையும் புரவிப.........
16 ..................................யமரே.

திணையும் துறையும் அவை.
பரணர். (கருஉ)

(கருக.) 1 ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த
2 பொலஞ்செய் பல்கா சணிந்த வல்குல்
3 வீகைக் கண்ணி யிலங்கத் தைஇத்
4 தருமமொ டியல்வோள் சாயன் நோக்கித்
(ரு) தவிர்த்த தேரை விளர்த்த கண்ணை
6 வினவ லானா வெல்போர் நெடுந்தகை
7 யார்மக ளென்போய் கூறக் கேளினிக்
8 குன.................நிலைப்பல ரேர்பு
9 நாட்கடா வழிதித நனந்தலைக் குப்பை
க0) வல்வி லிளையர்க் கல்குபத மாற்றாத்
11 தொல்குடி மன்னன் மகளே முன்னாட்
12 கூறி வந்த மாமுது வேந்தர்க்கு
13 .............................
14 .......புழக்கிக் குருதி யோட்டிக்
கரு) கதுவாய் போகிய நுதிவா யெஃகமொடு
16 பஞ்சியுங் களையாப் புண்ண ர்
17 அஞ்சுதக வுடையரிவ டன்னை மாரே.

திணையும் துறையும் அவை.
காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார். (கருக)

(கருச.) 1 அரசு தலைவரினு மடங்க லானா
2 நிரைகா ழெஃக நீரின் மூழ்கப்
3 புரையோர் சேர்ந்தெனத் தந்தையும் பெயர்க்கும்
4 வயலமர் கழனி வாயிற் பொய்கைக்
(ரு) கயலார் நாரை யுகைத்த வாளை
6 புனலாடு மகளிர் வளமனை யொய்யு
7 மூர்கவி னிழப்பவும் வருவது கொல்லோ
8 சுணங்கணிந் தேந்திய வணங்கேர் திளமுலை
9 வீங்கிறைப் பணைத்தோண் மடந்தை
க0) மான்பிணை யன்ன மகிழ்மட நோக்கே.

355, 356.



திணையும் துறையும் அவை.

பூரணர்.

(௩௫௪)

(௩௫௫.) 1 மதிலு ஞாயி லின்றோ கிடங்கும்
2 நீஇ ரின்மையிற் கன்றுமேய்ந் துகளு
3 மூரது நிலைமையு மிதுவே
.................................................
.................................................
.................................................

(௩௫௫)

(௩௫௬.) 1 பனிபழுநிய பல்யாமத்துப்
2 பாறுதலை மயிர்நனைய
3 இனிது துஞ்சுந் திருநகர் வரைப்பின்
4 இனைய லகற்றவென் கிணைதொடாக் குறுகி
(௫) அவியுணவினோர் புறங்காப்ப
6 அறநெஞ்சத்தோன் வாழ்நாளென
7 அதற்கொண்டு வரலேத்திக்
8 கரவில்லாக் கவிவண்கையான்
9 வாழ்கவெனப் பெயர்பெற்றோர்
௧0) பிறர்க்குவமந் தானல்லது
11 தனக்குவமம் பிறிதில்லென
12 அதுநினைந்து மதிமழுங்கி
13 யாங்குநின்ற வெற்காணூஉச்
14 சேய்நாட்டுச் செல்கிணைஞனை
௧௫) நீபுரவலை யெமக்கென்ன
15 மலைபயந்த மணியுங் கடறுபயந்த பொன்னுங்
16 கடல்பயந்த கதிர்முத்தமும்
17 வேறுபட்ட வுடையுஞ் சேறுபட்ட தசும்புங்
18 கனவிற் கண்டாங்கு வருந்தா தேகிறைய
௨0) நனவி னல்கியோ னசைசா றோன்றல்
21 நாடென மொழிவோ ரவனாடென மொழிவோர்
22 வேந்தென மொழிவோ ரவனே வேந்தென மொழிவோர்
23 காதல ரழுகண்ணீர்
24 என்புபடு சுடலை வெண்ணீ றவிப்ப
௨௫) எல்லார் புறனுந் தான்கண் டுலகத்து
26 ம.................................
27 தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே.

திணையும் துறையும் அவை.

கதையங்கண்ணனார்.

(௩௫௬)

(௩௫௭.) 1 குன்றுதலை மணந்த மலைபிணித் தியாத்தமண்
2 பொதுமை சுட்டிய மூவ ருலகமும்
3 பொதுமை யின்றி யாண்டிசி னோர்க்கு
4 மாண்ட அன்றே யாண்டுகள் துணையே
௫ வைத்த தன்றே வெறுக்கை வி......
6 ..............................ணை
7 புணைகை விட்டோர்க் கரிதே துணையழத்
8 தொக்குயிர் வெளவுங் காலை
9 யிக்கரை நின்றிவர்ந் துக்கரை கொளலே.

திணை - அது; துறை - ..................பெருங்காஞ்சியுமாம்.
பிரமனார். (௩௫௭)

(௩௫௮.) 1 பருதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநில
2 மொருபக லெழுவ ரெய்தி யற்றே,
3 வையமுந் தவமுந் தூக்கிற் றவத்துக்
4 கையவி யனைத்து மாற்றா தாகலிற்
௫ கைவிட் டனரே காதல ரதனால்
6 விட்டோரை (க) விடாஅ டிருவே
7 விடாஅ தோரிவள் விடப்பட் டோரே.

திணை - அது; துறை - மனையறம், துறவறம்.
வான்மீகையார். (௩௫௮)

ச. விடாஅது திரு.

(௩௫௯.) 1 பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்
2 வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு
3 பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல
4 பேஎ மகளிர் பிணந்தழூஉப் பற்றி
௫ விளருன் றின்ற வெம்புலான் மெய்யர்
6 களரி மருங்கிற் கால்பெயர்த் தாடி
7 யீம விளக்கின் வெருவரப் பேருங்
8 காடுமுன் னினரே நாடுகொண் டோரு
9 நினக்கும் வருதல் வைகலற் றே
௰ வசையு நிற்கு மிசையு நிற்கும்
11 அதனால், வசைநீக்கி யிசைவேண்டியு
12 நசைவேண்டாது நன்றுமொழிந்து
13 நிலவுக்கோட்டுப் பலகளிற் றொடு
14 பொலம்படைய மாமயங்கிட
கரு விழைகிளர் நெடுந்தே ரிரவலர்க் கருகாது

கொள்ளெனா விடுவை யாயின் வெள்ளென
வாண்டுநீ பெயர்ந்த பின்னு
மீண்டுநீடு விளங்குநீ யெய்திய புகழே.

திணை - அது; துறை - பெருங்காஞ்சி.
அந்துவன்கீரனைக்காவட்டனார்.

(௩௫௦.) பெரிதாராச் சிறுசினத்தர்,
சில்சொல்லாற் பல்கேள்வியர்,
நுண்ணுணர்வினாற் பெருங்கொடையர்,
கலுழ்நனையாற் றண்டேறலர்,
கனிகுய்யாற் கொழுந்துவையர்,
தாழுவந்து தழூஉமொழியர்,
பயனுறப் பகர்ந்தாற்றி
யேமமார்ந்த நின்னிலமாண்டோர்
சிலரே, பெரும! கேளினி நாளும்
பலரே, தகையஃ தறியா தோரே
அன்னோர் செல்வமு மன்னி நில்லா
தின்னு மற்றதன் பண்பே யதனா
னிச்சமு மொழுக்க முட்டிலை பரிசி
னச்சுவார் கையி னிரப்ப லோம்புமதி
யஞ்சுவரப் பாறிறை கொண்ட பறந்தலை மாகத
கள்ளி போகிய களரி மருங்கின்
வெள்ளி னிறுத்த பின்றைக் கள்ளொடு
புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி
புலைய னேவப் புன்மேல மர்ந்துண்
டழல்வாய்ப் புக்க பின்னும்
பலர்வாய்த் திராஅர் பருத்துண் டோரே!

திணையும் துறையும் அவை.
தந்துமாரனைச் சங்கவருணரென்னும், நாகரியர்பாடியது.

(௩௫௧.) காரெதி ருருமி னுறறிக் கல்லென, வாருயிர்க் கலமரு மாராக் கூற்றம், நின்வர வஞ்சலன் மாதோ நன்றில, கேள்வி முற்றிய வேள்வி யந்தணர்க், கருங்கல நீரொடு சிதறிப் பெருந்தகைத், தாயின் னன்று பலர்க்கீத்துத், தெருணடைய மாகளிறொடு தன், னருள்பாடுநர்க்கு நன்கருளியு, முருணடை ..............................
..........ான்றதன், னருள்சேருநர்க் கினிதீத்தும், புரிமாலையர் பாடினிக்கும், பொலந்தாமரைப் பூம்பாணரொடு, கலந்தளை இய நீளிருக்கையாற், பொறைமொ ....................மாரனேக்கின்

362



வில்லென விலங்கிய புருவதது வலலெனன நகினலஞ்சுமுள்
ளெயிற்றுமகளிரல்குறுங்காவுசைமெலவெ......ங்கல்தேந்தி
யமிழ்தெனமடுப்பமாந்தியிகழ்விலனில்லாவுலகத்து..........
..........மைநீசொல்லவேண்டாஞந்தறிந்த..........
..............................................
..............................................ஞர். (ஙசக)

(ஙசஉ.) ஞாயிற் றன்ன வாய்மணி மிடைந்த
2 மதியுறழ் ஆரம் மார்பிற் புரளப்
3 பலிபெறு முரசம் பாசறைச் சிலைப்பப்
4 பொழிலகம் பரந்த பெ.................
ரு) ...................கும வீசிய வெண்கொடி
6 யணங்குருத் தன்ன கணங்கொள் தானைக்
7 கூற்றத் தன்ன மாற்றரு முன்பின்
8 றாக்குரற் காண்பி னந்த ணாளிர்
9 நான்மறைக் குறி..............................யி
கo) னறங்குறித் தன்று பொருளா குதலின்
11 மருடீர்ந்து மயக்கொரீஇக்
12 கைபெய்தநீர் கடற்பரப்ப
13 வாமிருந்த வுடைநல்கிச்
14 சோறுகொடுத்து மிகப்பெரிதும்
கரு) வீறுசான...................நன்றுஞ
16 சிறுவெள் ளென்பி னெடுவெண் களரின்
17 வாய்வன் காக்கை கூகையொடு கூடிப்
18 பகலுங் கூவு மகலு ளாங்கட்
19 காடுகண் மறைத்த கல்லென் சுற்றமொ
உo) டில்லென் றில்வயிற் பெயர மெல்ல
21 யிடஞ்சிறி தொதுங்க லஞ்சி
22 யுடம்பொடுஞ் சென்மா ருயிர்ந்தோர் நாட்டே.

திணை - பொதுவியல்; துறை - பெருங்காஞ்சி.
அவனைச் சிறுவெண்டேரையார். (ஙசஉ)

(ஙசங.) இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநில
2 முடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்
3 தாமே யாண்ட வேமங் காவலர்
4 இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
ரு) காடுபதி யாகப் போகித் தத்த
6 நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே

7 அதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயா
8 துடம்பொடு நின்ற வுயிருமில்லை;
9 மடங்க லுண்மை மாயமோ வன்றே!
௧௦ கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
11 வெள்ளில் போகிய வியலு ளாங்கண்
12 ணுப்பிலா அவிப்புழுக்கல்
13 கைக்கொண்டு பிறக்குநோக்கா
14 திழிபிறப்பினோ னீயப்பெற்று
௧௫ நிலங்கல னாக விலங்குபலி மிசையு
16 மின்னா வைகல் வாரா முன்னே
17 செய்ந்நீ முன்னிய வினையே
18 முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே.

திணையும் துறையும் அவை.
......ஐயாதிச் சிறுவெண்டேரையார்.

(௩௬௪.) வாடா மாலை பாடினி யணியப்
2 பாணன் சென்னிக் கேணி பூவா
3 வெரிமரு டாமரைப் பெருமலர் தயங்க
4 மைவிடை யிரும்போத்துச் செந்தீச் சேர்த்திக்
௫ காயங் கனிந்த கண்ணகன் கொழுங்குறை
6 நறவுண் செவ்வாய் நாத்திறம் பெயர்ப்ப
7 வுண்டுந் தின்று மிரப்போர்க் கீந்தும்
8 மகிழ்கம் வம்மோ மறப்போ ரோயே!
9 மரிய வாகலு முரிய பெரும!
௧௦ நிலம்பக வீழ்ந்த வலங்கற் பல்வேர்
11 முதுமரப் பொத்திற் கதுமென வியம்புங்
12 கூகை கோழி யானாத்
13 தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே.

திணையும் துறையும் அவை.
அவனைக் கூகைக்கோழியார்.

(௩௬௫.) மயங்கிருங் கருவிய விசும்பு (க)முகனாக
2 வியங்கிய விருசுடர் கண்ணெனப் பெயரிய
3 (உ)வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம்
4 வயிரக் குறட்டின் (௩)வயங்குமணி யாத்துப்
௫ பொன்னந் திகிரி முன்சமத் துருட்டிப்
6 பொருநர்க் காணாச் செருமிகு முன்பின்
7 முன்னோர் செல்லவுஞ் செல்லா தின்னும்

௫ பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து
6 பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
7 நாரி தேறல் ................ மகிழ்ந்
8 திரவலர்க் கருங்கல மருகாது வீசி
9 வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்
௧0 வாழச் செய்த நல்வினை யல்ல
11 தாழுங் காலைப் புணைபிறி தில்லை
12 யொன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர்
13 முத்தீப் புரையக் காண்டக விருந்த
14 கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்தர்!
௧௫ யானறி யளவையோ விதுவே வானத்து
16 வயங்கித் தோன்று மீனினு மிம்மென
17 வியங்கு மாமழை யுறையினு மு
18 முயர்ந்து மேந் தோன்றிப் பொலிகநுந் நாளே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.

சேரமான்மாவெண்கோவும், பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப்பெரு வழுதியும், சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தாரை ஔவையார்.

(௩௬௭)

(௩௬௮.) களிறு முகந்து பெயர்குவ மெனினே,
2 யொளிறுமழை தவிர்க்குங் குன்றம் போலக்
3 கைம்மா வெல்லாங் கணைபிடத் தொலைந்தன
4 கொடிஞ்சி நெடுந்தேர் முகக்குவ மெனினே
௫ கடும்பரி நன்மான் வாங்குவயி னொல்கி
6 நெடும்பீ டழிந்து நிலஞ்சேர்ந் தனவே;
7 கொய்சுவற் புரவி முகக்குவ மெனினே,
8 மெய்நிறைந்த வடுவொடு பெரும்பிறி தாகி
9 வளிவழக் கறுத்த வங்கம் போலக்,
௧0 குருதி யம்பெரும் புனல்கூர்ந் தனவே;
11 யாங்க, முகவை யின்மையி னுகவை யின்றி
12 யிரப்போ ரிங்கு.. னென் வியன்களத்
13 தாளழிப் படுத்த வாளே ருழவ!
14 கடாஅ யானைக் கால்வழி யன்னவென்
௧௫ றெடாரித் தெண்கண் டெளிர்ப்ப வொற்றிப்
16 பாடி வந்த தெல்லாங் கோடியர்
17 முழவுமருள் திருமணி மிடைந்த
18 நிரைவுற மார முகக்குவ மெனவே.

திணை - வாகை; துறை - மறக்களவழி.

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளியோடு போர்ப்புறத்துப் பொருதுவீழ்ந்தாரங்கழத்தன்னதாக உயிர்போகாது கிடந்தானைக் கழாத்தலையார். (௩௬௮)

(௩௬௯.) இருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பிற்
கருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவ ரெறிவன ருயர்த்த
வாண்மின் னாக வயங்குகடிப் பமைந்த
(௫) குருதிப் பலிய முரசுமுழக் காக
அரசராப் பனிக்கு மணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா ணுகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
(௧௦) ஈரச் செறுவிற் றேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்த்த திருத்துறு செஞ்சாற்
பிடித்தெறி வைவேற் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
(௧௫) பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்க்
கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள!
தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
(௨௦) வேய்வை காணா விருந்திற் போர்வை
யரிக்குரற் றடாரி யுருப்ப வொற்றிப்
பாடி வந்திசிற் பெரும பாடான்
றெழிலி தோயு மிமிழிசை யருவிப்
பொன்னுடை நெடுங்கோட் டிமயத் தன்ன
(௨௫) வோடை நுதல வொல்குத லறியாத்
துடியடிக் குழவிப் பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி
தாழா வீகைத் தகைவெய் யோயே.

திணையும் துறையும் அவை; துறை - ஏர்க்கள உருவகமுமாம்.
சேரமான்கடலோட்டிய வேல்கெழுகுட்டுவனைப் பரணர். (௩௬௯)

(௩௭௦.) ...................................................ளி
[illegible] மேழுஞ் செய்துண் டோராங்குப்

3 பசிதினத் திரங்கிய விரும்பே ரொக்கற்
4 கார்ப்பெய்தங் கண்ணென்ன மாதிரந் துழைஇ
ரு வேருழந் துலறி மருங்குல......கொழிய
6 வத்தக் குடிஞை துடிமரு டீங்குரல்
7 லுழிஞ்சிலங் கவட்டிடை யிருந்த பருந்தின்
8 பெடைபயிர் குரலோ டிசைக்கு மாங்கட்
9 கழைகாய்ந் துலறி...........................
கo வரிமரற் றிரங்கிய கானம் பிற்பட
11 பழுமர முள்ளிய பறவை போல
12 வொண்படை மாரி வீழ்கனி பெய்தெனத்
13 துவைத்தெழு குருதி நிலமிசைப் பரப்ப
14 விளைந்த......குர லரிந்துகால் குவித்துப்
கரு ...............பல்போர் பழிய வாங்கி
16 யெருதுகளி றாக வாண்மட லோச்சி
17 யதரி திரித்த வாளுகு கடாவி
18 னகன்கட் டடாரி தெளிர்ப்ப வொற்றி
19 வெந்திறல் வியன்களம் பொலிகென் றேத்தி
உo யிருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பின்
21 வருமருண் முகவைக்கு வந்தனென் பெரும
22 வடிநவி லெஃகம் பாய்ந்தெனக் கிடந்த
23 தொடியுடைத் தடக்கை யோச்சி வெருவார்
24 இனத்தடி விராய வரிக்குட ரடைச்சி
உரு யழுகுரற் பேய்மக ளயரக் கழுகொடு
26 செஞ்செவி யெருவை திரிதரு
27 மஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே.

திணையும் துறையும் அவை.

சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியை ஊன்பொதிபசுங்குடையார்.

(ருஎக.) அகன்றலை வையத்துப் புரவல் காணது
2 மரந்தலைச் சேர்ந்து பட்டினி வைகிப்
3 போதவி ழலரி நாரிற் றொடுத்துத்
4 தயங்கிரும் பித்தை பொலியச் சூடிப்
ரு பறையொடு தகைத்த கலப்பையென் முரவுவா
6 யாடுறு குழிசி பாதின்று தூக்கி
7 மன்றவேம்பி னொண்பூ வுறைப்பக்
8 குறைசெயல் வேண்டா நசைய விருக்கையேன்

9 ளரிசி|யின்மையி|ஞரிடை|நீந்திக்|
௪௰) கூர்வா|யிரும்படை|நீரின்|மிளிர்ப்ப|
11 விருகணை|ய...‥...ளி|யன்பிஞ்று|தலைஇ|
12 யிளைசுரும்|பார்க்கு|மிளைசால்|பூசறை
13 யில்லே|ருழவ|நின்|னல்லிசை|யுள்ளிக்|
14 குறைத்தலைப்|பிணனெதிர்ப்போர்|பழித்தி
கரு) யானை|யெருத்தின்|வாண்மட|லோச்சி
16 யதரி|திரித்த|வாளுரு|கடாவின்|
17 மதியத்|தன்னவென்|விசியுறு|தடாரி
18 யகன்க|ணதிர|வாகுளி|தொடாலிற்|
19 பணைமரு|ணெடுந்தாட்|பல்பிணர்த்|தடக்கைப்|
௨௰) புகர்முக|முகவைக்கு|வந்திசிற் பெரும!
21 களிற்றுக்கோட்|டன்ன|வாலெயி|றழுத்தி
22 விழுக்கொடு|விரைஇய|வெண்ணிணச்|சுவையினள்|
23 குடர்த்தலை|மாலை|துயல்வரச்|சூடி, (யுணத்தின)
24 வாருப்|பெருவிளஞ்|செய்தோன்|வானத்து|
௨௫) வயங்குபன்|மீனினும்|வாழியர்|பலவென|
26 வுருகெழு|பேஎய்மக|ளயரக்|
27 குருதித்|துகளாடிய|கள்ளக்கிழ|வோயே!|

திணையும் துறையும் அவை.
தலையாலங்கானத்துச் செருவென்றநெடுஞ்செழியனைக்|கல்லாடனார். | (௩௭௧)

(௩௭௨.) விசிபிணித்|தடாரி|விம்மென|வொற்றி
2 யேத்தி|வந்த|தெல்லா|முழுத்த
3 வில்குவா|ளவிரொளி|வலம்பட|மின்னிக்
4 கணைத்துளி|பொழிந்த|கணைகூடு|பாசறைப்
௫) பொருந்தாத்|தெவ்வ|ரிரிந்தலை|யடுப்பிற்|
6 கூவிள|விறகி|னாக்குவரி|நுடங்க|
7 வானு|மண்டை|வன்னியந்|துடுப்பி|
8 னீனு|வெண்மா|னிடந்துழந்|தட்ட|
9 மாமறி|பிண்டம்|வாலுவ|னேந்த|
௰) வதுவை|விழவிற்|புதுவோர்க்|கெல்லாம்
11 வெவ்வாய்ப்|பெய்த|பூதநீர்|சால்கெனப்|
12 புலவுக்களம்|பொலிய|வேட்டோய்நின்|
13 னிலவுத்திகிரி|ப்பூர|முகக்குவ|மெனவே. ||

திணை - வாகை ; துறை - மறக்களவேள்வி.
அவனை மாங்குடிகிழார். (௩௭௨)

(கூஎகூ.) உருமிசை முரச முழக்கென விசைப்பச்
செருநவில் வேழங் கொண்மூ வாகத்
தேர்மா வளிதுளி தலைஇ நாமுறக்
கணைக்காற் றெடுந்த கண்ணகன் பாசறை
ரு) யிழிதரு குருதியொ டேந்திய வொள்வாட்
பிழிவது போலப் பிட்டையூ றுவப்ப
மைந்த ராடிய மயங்குபெருந் தானைக்
கொங்கு புறம்பெற்ற கொற்றவேந்தே
..........................தண்ட மார்பொறி
க0) மடக்கண் மயிலியன் மறலி யாங்கு
நெடுஞ்சுவர் நல்லில் புலம்பக் கடைகழிந்து
மென்றோண் மகளிர் மன்றம் பேணார்
புண்ணுவ..........................................
..........................யணிப் புரவி வாழ்கெனச்
கரு) சென்னிழ லின்மையி னன்னிழற் சேர
நுண்பூண் மார்பிற் புன்றலைச் சிறாஅர்
அம்பழி பொழுதிற் றமர்முகங் காணா
......................................ற் றெருக்கான
வேந்து புறங்கொடுத்த வீந்துகு பறந்தலை
உ0) மாடு மயங்கெரி மண்டிக் கோடிறு
புருமெறி மலையி னிருக்கிலஞ் சேரச்
சென்றோன் மன்ற சொ....................
..............ண்ணறிநர் கண்டுகண் ணலைப்ப
வஞ்சி முற்றம் வயக்கள னாக
உரு) வஞ்சா மறவ ராட்போர் பழித்துக்
கொண்டனை பெரும குடபுலத் ததரி
பொலிக வத்தைநின் பணைதனற......ளம்
விளங்குதினை வேந்தர் களந்தொறுஞ் சென்று
புகர்முக முகவை பொலிகென் றேத்தித்
கூ0) தொண்டு ரென்பு பெரியோர் யானு
மங்கண் மாக்கிணை யதிர வொற்ற
.............லெனையினுங் காதலி னேத்து
நின்னோர் பிறரிவ ணின்மையின்..........
மன்னெயின் முகவைக்கு வந்திசிற் பெரும
கூரு) பகைவர் புகழ்ந்த வாண்மை நகைவர்க்குத்
தாவின் றுதவும் பண்பிற் பேயொடு

கணநரி திரிதருந் மாங்கணினன்றுந் துஞ்
செஞ்செவி யெருவை குழீஇ
யஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே.

திணை - அது; துறை - மறக்களவழி; ஏர்க்களவுருவகமுமாம்.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன் கருவூரேறிந்தானைக் கோவூர்கிழார்.

(௩௭௪.) கானன் மேய்ந்து வியன்புலத் தல்கும்
புல்வா யிரலை நெற்றி யன்ன
பொலமிலங்கு சென்னிய பாறுமயி ரவியத்
தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்
(௫) மன்றப் பலவின் மால்வரை பொருந்தியென்
றெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
யிருங்கலை யோர்ப்ப விசைஇக் காண்வரக்
கருங்கோற் குறிஞ்சி யடுக்கம் பாடப்
புலிப்பற் றாலிப் புன்றலைச் சிறாஅர்
(௧௦) மான்கண் மகளிர்க் கான்றே ரகன்றுவா
சிலைப்பாற் பட்ட முளவுமான் கொழுங்குறை
விடர்முழை யடுக்கத்துச் சினைமுதிர் சாந்தம்
புகர்முக வேழத்து மருப்பொடு மூன்று
மிருங்கேழ் வயப்புலி வரியதள் குவைஇ
(௧௫) விருந்திறை நல்கு நாடனெங் கோன்
கழறொடி யாஅ யண்டிரன் போல
வண்மையு முடையையோ ஞாயிறு
கொன்விளங் குதியால் விசும்பி னானே.

திணை - பாடாண்டிணை; துறை - பூவைநிலை.

ஆய் அண்டிரனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்.

(௩௭௫.) அலங்குகதிர் சுமந்த கலங்கற் சூழி
நிலைதளர்வு தொலைந்த வொல்குநிலைப் பல்காற்
பொதியி லொருசிறை பள்ளி யாக
முழாஅ வரைப் போந்தை யரவாய் மாமடல்
(௫) ணாரும் போழுங் கிணையொடு சுருக்கி
யேரின் வாழ்நர் குடிமுறை புகாஅ
ஆழிரந் துண்ணு முயவல் வாழ்க்கைப்
புலவ ரிருந்து கொள்ளுஞ் சான்றோர் யாரெனப்
பிரசந் தூங்கு மறாஅ யாணர்

௧0) ரவரை யணிப்படப்பை நன்னாட்டுப் பொருந
பொய்யா வீகைக் கழறொடி யாஅய்
யாவரு மின்மையிற் கிணைப்பத் தாவது
பெருமழை கடற்பரந் தாஅங்கி யானுமோ
மொருநின் னுள்ளி வந்தனெ னதனாற்
௧௫) புலவர் புக்கி லாகி நிலவரை
நிலீய ரத்தை நீயே யொன்றே
நின்னின்று வறுவி தாகிய வுலகத்து
நிலவன் மாரோ புரவலர் துன்னிப்
பெரிய வோத்தினுஞ் சிறிய வுணராப்
பீடின்று பெருகிய திருவிற்
பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே.

திணை - பாடாண்டிணை; துறை - வாழ்த்தியல்.

அவனை அவர்.

(௩எ௫)

(௩எ௬.) விசும்பு நீத்த மிறந்த ஞாயிற்றுப்
பசுங்கதிர் பழுனிய சிவந்துவாங் கந்திச்
சிறுநனி யிறந்த பின்றைச் செறிபிணிச்
சிதாஅர் வள்பினென் றடாரி தழீஇப்
௫) பாண ராரு மளவை யான்றன்
யாணர் நன்மனைக் கூட்டுமுத னின்றனெ னி
மைத்தோர் விழித்த மாத்திரை ஞெரேரெனக்
குணக்கெழு திங்கள் கனையிரு ளகற்றப்
பண்டறி வாரா வுருவோ டென்னரைத்
௧0) தொன்றுபடு துளையொடு பருவிழை போகி
நைந்துகரைப் பறைந்தவென் னுடைய நோக்கி
விருந்தின னளிய னிவனெனப் பெருந்தகை
(க) நின்ற முரற்கை மிக்கு நன்று
மரவுவெகுண் டன்ன தேறலொடு சூடுருபு
௧௫) நிரயத் தன்னவென் வறன்களைந் தன்றே
யிரவி னன்னே யீத்தோ னெந்தை
யன்றை ஞான்றினோ டின்றி னூங்கு
மிரப்பச் சிந்தியே னிரப்படு புணையி
னுளத்தி னளக்கு மிரந்த கையே னெ
௨0) னிறைக்குள் புதவின் மகிழ்ந்தனெ னாகி
ஒருநாள், இரவலர் வாரா வள்ளியோர் கடைத்தலை

22 ஞாங்கர் நெடுமொழி பயிற்றித்
23 தோன்றல் செல்லாதென் சிறுகிணைக் குரலே.

திணை - அது; துறை - இயன்மொழி.

ஓய்மான்நல்லியாதனைப் புறத்திணைநன்னாகனார். (௩௭௬)

௩. நின்றமூரற்.
நின்றமூரற்கைநீக்கி.

(௩௭௭) ........................................ பொற்கோட்டி
யானையரியக்கவர்பரிக் (க) கச்சைநன்மான் (உ) வடிமணிவாங்கு
சினைநற்றேர்க்குழுவின (௩) கதழிசை வனதளிவுவா-வினவாழ்
நரார்வமொமனறிடநதடலொலிகொண்டுகாளையடலியெங்
குருசினீமன்னியநெடிதே!

திணை - அது; துறை - வாழ்த்தியல்.

சோழன் இராசசூயம் வேட்டபெருநற்கிள்ளியை உலோச்சனார். (௩௭௭)

க. கச்சமை. உ. வடிமணியாங்குருள.
௩. கதழ்பரி.............டீண்டிக்கடலொலிகொசமா.

(௩௭௮) 1 தென்பரதவர் மிடல்சாய
2 வடவடுகர் வாளோட்டிய
3 தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
4 கடுமா கடைஇய விடுபரி வடிம்பி
௫ னற்றார்க் கள்ளின் சோழன் கோயிற்
6 புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்துப்
7 பனிக்கயத் தன்ன நீணகர் நின்றே
8 னரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி
9 யெஞ்சா மரபின் வஞ்சி பாட
௧௦ வெமக்கென வகுத்த வல்ல மிகப்பல
11 மேம்படு சிறப்பி னருங்கல வெறுக்கை
12 தாங்காது பொழிதந் தோனே யதுகண்
13 டிலம்பா டுழந்தவெ னிரும்பே ரொக்கல்
14 விரற்செறி மரபின செவித்தொடக் குநருஞ்
௧௫ செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரும்
16 அரைக்கமை மரபின மிடற்றியாக் குநரும்
17 மிடற்றமை மரபின வரைக்கியாக் குநருங்
18 கடுந்தெற லிராம னுடன்புணர் சீதையை
19 வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்

378 — 380.



21 செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங்
22 கறைந்த வருநகை யினிதுபெற் றிகுமே
23 யிருங்கிளைத் தலைமை யெய்தி
24 யரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே.

திணை - அது; துறை - இயன்மொழி.

சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியை ஊன்பொதிபசுங்குடையார். (௩௭௮)

(௩௭௯) 1 யானே பெறுகவன் றாணிழல் வாழ்க்கை
2 யவனே பெறுகவென் னாவிசை நுவறல்
3 நெல்லரி தொழுவர் கூர்வாண் மழுங்கிற்
4 பின்னை மறத்தோ டரியக் கல்செத்
5 தள்ள லியாமைக் கூன்புறத் துரிஞ்சு
6 நெல்லமல் புரவி னிலங்கை கிழவோன்
7 வில்லியாதன் கிணையேம் பெரும!
8 குறுந்தா ளேற்றைக் கொழுங்கண் விளர்
9 நறுநெய் யுருக்கி நாட்சொறி...............
10 வல்ல னெந்தை பசிதீர்த் தல்லெனக்
11 கொன்வரல் வாழ்க்கைநின் கிணைவன் கூறக்
12 கேட்டதற் கொண்டும் வேட்கைதண் டாது
13 விட்டோய் தலைய குன்றம் பின்படர
14 ....................கனென் யானே தாயிற்
15 றாவாக் குழவி போல வாங்கத்
16 திருவுடைத் திருமனை யைதுதோன் றுகமழ்புகை
17 வருமழை மங்குலின் மறுகுடன் மறைக்குங்
18 குறும்ப........டநெடு கழி நீண்மதி லூரே.

திணை - அது; துறை - பரிசிற்றுறை.

ஓய் மான்வில்லியாதனைப் புறத்திணைநன்னாகனார். (௩௭௯)

(௩௮௦.) 1 தென்பவ் வத்து முத்துப் பூண்டு
2 வட்குன்ற.........................
3 ................................ங்கபிற் றூணி
4 யின்னிசை விறல்வென் றித்
5 தென்னவர் வயமறவன்
6 மிசைப்பெய்த நீர் கடற்பரந்து முத்தாகுந்து
7 நாறிதழ்க் குளவியொடு கூதளங் குழைய..

௨௫ திருங்கோ ளீகைப் பூட்கைக்
26 கரும்ப னூரன் காதன் மகனே.

திணையும் துறையும் அவை.
கரும்பனூர்கிழானை நன்னாகனார். (௩௮௧)

௧. தீர்க்குவோனதனால். ௩. கொண்டவருமழை.
௨. நிலங்கடலகீ. ௪. முழக்கிடைக்.

(௩௮௨) கடற்படை யடற்கொண்டி
2 மண்டுற்ற மறனொன்றுட்
3 டண்சோழ நாட்டுப்பொருந!
4 னல்கினோ யணிபிவுளி
௫ நலங்கிள்ளி நசைப்பொருநரேம்
6 பிறர்ப்பாடிப் பெறல்வேண்டேம்
7 அவற்பா டுதுமவன் றுள்வா ழியவென
8 நெய்குய்ய வூனவின்ற
9 பலசோற்று னின்சுவைய
௧0 நல்குரவினப்சிததுன்பவெண்பினள
11 முன்னாள் விட்ட மூதறி சிறு அரும்
12 யானுமே மணியங் கேழணி யுத்திக்
13 கட்கேள்விக் கவைநாவிற்
14 றாநிறத்த வரா அப்போல
௧௫ வறனொரீஇ வயங்குவாய்ப்ப
16 விடுமதி யத்தை கடுமான் றோன்றல்!
17 எினதே, முந்நீ ருடுத்தவிவ் வியனுல கறிய
18 வெனதே கிடைக்கா ழன்னவென் றெண்கண் மாக்கிணைக்
19 கண்ணகத் தியாத்த நுண்ணரிச் சிறுகோல்
௨0 வெற்றொறு நுடங்கி யாங்குநின் பகைஞர்
21 கேட்டோறு நடுங்க வேத்து
22 வென்றோ றோர்பிறர் வேத்தவை யானே

திணை - அது; துறை - கடைநிலை.
சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார். (௩௮௨)

(௩௮௩) ஒண்பொறிச் சேவல் விழிப்ப வேற்றெழுந்து
2 தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்
3 நுண்கோற் சிறுகிணை சிலம்ப வொற்றி
4 நெடுங்கடை நின்று பகடுபல வாழ்த்தித்
௫ தண்புக ழேத்தினெ னாகவூனபுலங் ........

7 தருங்கடி வியனகர்க் குறுகல் வேண்டிக்
8 கூம்புவிடு மென்பிணி யவிழ்த்த வாம்பற்
9 றேம்பா யுள்ள தங்கமழ் மட்டுண்ணப்
கO பாம்பு பயந்தன்ன வடியின் (க)சாம்பின்
11 கழைபடு சொலியி னிழையணி வாரா
12 வொண்பூங் கலிங்க முடீஇ நுண்பூண்
13 வசிந்துவாங்கு நுசுப்பி னவ்வாங் குந்திக்
14 கற்புடை மடந்தை தற்புறம் புல்ல
கரு வெற்பெயர்ந்த நோக்கி....................
16 ..............................கற்கொண்
17 (உ)டளித்துப் பிறந்தனெ னாகி யவ்வழிப்
18 பிறர், பாடுபுகழ் பாரிப் படர்பறி வேனே
19 குறுமுலைக் கன்மரும் பாலார் வெண்மறி
உO நனைமுக வூகமொடு கஞ்சென...............
21 .................(ந)தன்றுபல கெழீஇய
22 கான்கெழு நாடன் கடுந்தேர் வியனென
23 வொருவனை யுடையேன் மன்னே யானே
24 யருமென்வன் பரிகோ வெள்ளிய துகிலேய.

திணையும் துறையு மவை.
மாறோக்கத்து *நப்பசலையார்.

(நஅ)

க. காம்பின். உ. டழித்தப. ந. தனறுபல.

(ந,வுச.) 1 யென்பாலா னுடனணைஇ
2 வஞ்சிக்கோட் டுறங்குநாரை
3 யறைக்கரும்பின் பூவருந்தும்
4 வன்(க)பாலாற் கருங்காலவரகின்
(ரு) ..........................................
6 வங்கட் குறுமுயல் வெருவ வயல
7 கருங்கோட் டிருப்பைப் பூவுறைக் குந்து
8 விழவின் றாயினு முழவுமாண் புடைத்
9 திருங்கெடிற்று மிசையொடு பூங்கள் வைகுந்து
கO .................. தணையேம் பெரும
11 செல்லென்னும் பொன்னென்னுங்
12 கன்னற் கொண்ட நறவென்னு
13 ...............மன்னா வவைபலவும்

* நப்பாலையாரென்றும் பிரதிபேதமுண்டு.

14 யான்றண்டவு (உ) மூன்றண்டா
கரு) நிணம்பெருத்த கொழுஞ்............
16 ..................................
17 நீர்நாண நெய்வழங்கிப்
18 புரந்தோ னெந்தை யாமலந் தொலை.........
19 யன்னோ னுடையே மென்பவற.........
உ0) கிப்பாண் டிருக்க வெள்ளி பூண்ட
21 வுண்டநன் கலம் பெய்து நுடக்கவுந்
22 தின்றநண் ப (ங) லூன்றோண் டவும்
23 வந்த வைக லல்லது
24 சென்ற வெல்லைச் செலவறி யேனே.

திணையும் துறையும் அவை.

கரும்பனூர்கிழானைப் புறத்திணைநன்னாகனார். (கூஅசு)

க. பாலாற்கு. உ. மதூன்றண்டா. ங. லூன்றொன்றண்டவு.

(கூஅரு.) வெள்ளி தோன்றப் புள்ளுக்குர லியம்பப்
2 புலரி விடியற் பகடுபல வாழ்த்தித்
3 தன்கடைத் தோன்றினு மிலனே பிறன்கடை
4 யகன்கட் டடாரிப் பாடுகேட் டருளி
ரு) வறனியா னீங்கல் வேண்டி யென்னரை
6 நீல்த்தின் சிதார்களைந்து
7 வெளிது டீஇயென் பசிகளைந் தோனே!
8 காவிரி கணையுந் தாழ்நீர்ப் படப்பை
9 நெல்விளை கழனி யம்பர் கிழவோன்
க0) னல்லரு வந்தை வாழியர் புல்லிய
11 வேங்கட விறல்வரைப் பட்ட
12 வோங்கல் வானத் துறையினும் பலவே.

திணை - அது; துறை - வாழ்த்தியல்.

அம்பர்கிழான் அருவந்தையைக் கல்லாடனார். (கூஅரு)

(கூஅசு.) நெடுநீர நிறைகயத்துப்
2 படுமாரித் துளிபோல
3 நெய்துள்ளிய வறைமுகக்கவுஞ்
4 சூடுகிழித்து வாடூன் மிசையவுங்
ரு) ஊன்கொண்ட வெண்மண்டை
6 யான்பயத்தான் முற்றிழிப்பவும்
7 வெய்துண்ட வியர்ப்பல்லது

யண்ணல் யானை வழுகண
௧௫ மாறி வியவரென் பெருங்கிளைப் புரவே.

திணை - அது; துறை - இயன்மொழி.
சிறுகுடிகிழான் பண்ணனை மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார். (௩௮௮)

(௩௮௯.) நீர் நுங்கின் கண்வலிப்பக்
கானவேம்பின் காய்திரங்கக்
கயங்களியுங் கோடையாயினும்
மேலா வெண்பொன் போருறு காலை
௫ யெம்மு முள்ளுமோ பிள்ளையம் பொருந
வென்றீத் தனனே யிசைசா னெடுந்தகை
யின்றுசென் றெய்தும் வழியனு மில்லன்
செலினே காணா வழியனு மல்லன்
புன்றலை மடப்பிடி யினையக் கன்றுதந்து
௧௦ குன்றக நல்லூர் மன்றத்துப் பிணிக்குங்
கல்லிழி யருவி வேங்கடங் கிழவோன்
செல்வுழி யெழாஅ நல்லேர் முதிய
னாதனுங்கன் போல நீயும்
பசித்த வொக்கற் பழங்கண் வீட
௧௫ வீறுசா னன்கல நல்குமதி பெரும
வைதக லல்குன் மகளிர்
நெய்தல் கேளன்மார் நெடுங்கடை யானே.

திணையும் துறையும் அவை.
ஆதனுங்கனைக் கள்ளில் ஆத்திரையனார். (௩௮௯)

(௩௯௦.) அறவை நெஞ்சத் தாயர் வளரு
மறவை நெஞ்சத் தாயிவாளர்
அரும்பலர் செருந்தி நெடுங்கான் மலர்கமழ்
முன்முற்றத் தார்வலர் குறுகி னல்லது காவலர்
௫ கனவினுங் குறுகாக் கடியுடை வியனகர்
மலைக்கணத் தன்ன மாடஞ் சிலம்பவெண்
ணிக்குரற் றடாரி யிரிய வொற்றிப்
பாடி நின்ற பன்னா ளன்றியுஞ்
சென்ற ஞான்றைச் சென்றுபடு மிரவின்
௧௦ வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற
புன்றலைப் பொருந னளியன் றானெனத்
தன்னுழைக் குறுகல் வேண்டி யென்னரை

௨0) றுளிபதனறிந்து பொழிய
வேலி யாயிரம் விளைகநின் வயலே.

திணை - அது ; துறை - கடைநிலை.
பொறையாற்றுகிழானைக் கல்லாடனார். (௩௯௧)

(௩௯௨.) மதியேர் வெண்குடை யதியர் கோமான்
கொடும்பூ ணெழினி நெடுங்கடை நின்றியான்
பசலை நிலவின் பனிபடு விடியற்
பொருகளிற் றடிவழி யன்ன வென்கைக்
(௫) கொருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ
வுருகெழு மன்ன ராரெயில் கடந்து
நிணம்படு குருதிப் பெரும்பாட் டீரத்
தணங்குடை மரபி னிருங்களந் தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
க0) வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்
வைக லுழவ வாழிய பெரிதெனச்
சென்றியா னின்றனெ னாக வன்றே
யூருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
கரு) நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்மெனத்
தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்
கோண்மீ னன்ன பொலங்கலத் தளைஇ
யூண்முறை யீத்த வன்றியுங் கோண்முறை
விருந்திறை நல்கி யோனே யந்தரத்
௨0) தரும்பெற லமிழ்த மன்ன
கரும்பிவட் டந்தோன் பெரும்பிறங் கடையே.

திணையும் துறையும் அவை.
அதியமான்மகன் பொகுட்டெழினியை ஒளவையார். (௩௯௨)

(௩௯௩.) பதிமுதற் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்
குறுநெடுந் துணையொடு கூமை வீதலிற்
குடிமுறை பாடி யொய்யென வருந்தி
யடனசை மறந்தவெங் குழிசி மலர்க்கும்
(௫) கடனறி யாளர் பிறநாட் டின்மையின்
வள்ளன் மையினெம் வரைவோர் யாரென
வுள்ளிய வுள்ளமொ டுலைநசைத் துணையா
கவுலக மெல்லா மொருபாற் பட்டென

17 தூன்றும் பரிசிறருமென

18 வென்றுஞ் செல்லேனவன் குன்றுகெழு நாட்டே.

திணையும் துறையும் அவை.

கடைநிலையாயினவெல்லாம் பாடாண்டிணை.

சோழியவேனுதிதிருக்குட்டுவனைக் கோனாட்டு எறிச்சலூர்மாடலன்மதுரைக் குமரனார். (௩௯௪)

(௩௯௫.) வயலுழவர் வன்புலத்துப்

2 பிடிவிட்டுக் குறுமுயலின்

3 கழைச்சூட்டொடு நெடுவாளைப்

4 பல்லுவியற் பழஞ்சோற்றுப்

௫ புகவருத்திப் புதற்றளவின்

6 பூச்சூடி ..............................

7 ..................... அரியலாருந்து

8 மனைக்கோழிப் பைம்பயிரினனே

9 கானக்கோழிக் கவர்குரலொடு

௧௦ நீர்க்கோழிக் கூப்பெயர்க்குந்து

11 வேயன்ன மென்றோளால்

12 மயிலன்ன மென்சாயலார்

13 கிளிகடியின்னே

14 யகலள்ளற் புள்ளிரி இயுந்து

௧௫ யாங்கப் பலநெல்லிற் பல்லண்ணியுஞ்

16 சீர்சான்ற விழுச்சிறப்பிற்

17 சிறுகண் யானைப் பெறலருந் தித்தன்

18 செ......................... உறந்தைக் குணாது

19 நெடுங்கை வேண்மா னருங்கடிப் பிடவூர்

௨௦ றபபெயாச் சாத்தன் கிளையேம் பெரும

21 முன்றி லணிபகற் சுரனுழந்து வருந்திக்

22 கதிரனி செ.............................. மாலைத்

23 தன்கடைத் தோன்றி யென்னுற விசைத்தலிற்

24 றீங்குரல் .......... கினரிக்குரற் றடாரியொ

௨௫ டாங்குநின்ற வெற்கண்டு

26 சிறிதுநில்லான் பெரிதுங்கூறான்

27 னருங்கலம் வரவே யருளினன் வேண்டி

28 யென்னுரைத் தன்றி நல்கித் தன்மனைப்

29 பொன்போன் மடந்தையைக் காட்டி யிவனை

௩௦ யென்போற் போற்றென் றோனே யதற்கண்

395 . 396.



31 டவன்மறவலேனே பிறருள்ளலேனே
32 யகன்ஞாலம் பெரிதுவெம்பினு
33 மிகவானுள் எரிதோன்றினுங்
34 குளமீனொடுந் தாட்புகையினும்
௩௫ பெருஞ்செய் நெல்லின் கொக்குகிர் நிமிரல்
36 பசுங்கட் கருனைச் சூட்டொடு மாந்தி
37 விளைவெனமெற வெள்ளங்கொள்கென
38 வுள்ளது மில்லது மறியா
39 தாங்கமைந்தன்றால் வாழ்கவன் றாளே!

திணையும் துறையும் அவை.
சோழநாட்டுப் பிடவூர்கிழார்மகன் பெருஞ்சாத்தனை மதுரைநக்கீரர். (௩௯௫)

(௩௯௬) கீழ்நீரான் மீன்வழங்குந்து
2 மீநீரான் கண்ணன்ன மலர்பூக்குந்து
3 கழிசுற்றிய விளைகழனி
4 யரிப்பறைவாற் புள்ளோப்புந்
௫ துண்டுநீர் கூறு மணற்றண்கான்
6 மென்பறையாற் புள்ளிரியுந்து
7 நனைக்கள்ளின் மனைக்கோசர்
8 தீந்தேறல் நறவுமகிழ்ந்து
9 தீங்குரவைக் கொளைத்தாங்குந்து
௰ வுள்ளிலோர்க்கு வலியாகுவன்
11 கேளிலோர்க்குக் கேளாகுவன்
12 கழுமிய வேளே
13 வளநீர் வாட்டாற் றெழினியாதன்
14 கிணையேம்பெரும கொழுந்தடிய சூடென்கோ
௧௫ வளநனையின் மட்டென்கோ
16 குறுமுயலின் நிணம்பெய்தந்த
17 நறுநெய்ய சோறென்கோ
18 திறந்துமறந்து கூட்டுமுதல்
19 முகந்துகொள்ளு மூணவென்கோ
௨௦ வனவனையபலபலவே..............
21 ..............................ருநதய
22 விருந்தேறாக்க விருந்செந்திய
23 வழித்துவப்ப வீதோனெந்தை
24 யெம்மோராக்கக் கடுந்தண்டே
௨௫ மாரிவானத்து மீனப்பன்

௫

26 விரிகதிர் வெண்டிங்களின்
27 விளங்கித் தோன்றுக வவன் கலங்கா நல்லிசை
28 யாமும் பிறரும் வாழ்த்த நாளும்
29 நிரைசா னன்கல னல்கி
௩௦ யுரைசெலச் சிறக்க வவன் பாடல்சால் வளனே.

திணையும் துறையும் அவை.

வாட்டாற்றெழினியாதனை மாங்குடிகிழார். (௩௯௬)

(௩௯௭.) வெள்ளியு மிருவிசும் பேர்தரும் புள்ளு
2 மயர்சினைக் குடம்பைக் குரற்றோற் றினவே
3 பொய்கையும் போதுகண் விழித்தன பைபயச்
4 சுடருஞ் சுருங்கின் றொளியே பாடெழுந்
௫ திரங்குகுரன் முரசமொடு வலம்புரி யார்ப்ப
6 விரவுப் புறங்கண்ட காலைத் தோன்றி
7 யெஃகிருளகற்று மேமப் பாசறை
8 வைகறை யரவங் கேளியர் பலகோட்
9 செய்தார் மார்ப வெழுமதி துயிலெனத்
௧௦ தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
11 நெடுங்கடைத் தோன்றி யோனே யதுநயந்
12 துள்ளி வந்த பரிசில னிவனென
13 நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு
14 மணிக்கல னிறைந்த மணநாறு தேறல்
௧௫ பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு
16 மாரி யன்ன வண்மையிற் சொரிந்து
17 வேனி லன்னவென் வெப்பு நீங்க
18 வருங்கல நல்கி யோனே யென்றுஞ்
19 செறுவிற் பூத்த சேயிதழ்த் தாமரை
௨௦ யறுதொழி லந்தண ரறம்புரிந் தெடுத்த
21 தீயொடு விளங்கு நாடன் வாய்வாள்
22 வலம்படு தீவிற் பொலம்பூண் வளவன்
23 எறிதிரைப் பெருங்கட லிறுதிக்கட் செல்லினுந்
24 தெறுகதிர்க் கனலி தென்றிசைத் தோன்றினும்
௨௫ மென்னென் னஞ்சலம் யாமே வென்வேற்
26 அருஞ்சமந் ததைக்கு மாற்றலவன்
27 திருந்து கழ லடிநிழ லுண்ணிழ லேமே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசில்விடை; கடைநிலைவிடை.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவனை எருக்காட்டூர்த்தாயங்கண்ணனார். (௩௯௭)

செறுவின் வள்ளை சிறுகொடிப் பாகற்
பாதிரி யூழ்முகை யவிழ்விடுத் தன்ன
மெய்களைந் தினனொடு விரைஇ ......
மூழ்ப்பப் பெய்த முழுவிழுப் புழுக்கல்
௧0) ........ களத்திற் படுநர் களியட வைகிற்
பழஞ்சோற் றயிரு முழங்குநீர்ப் படப்பைக்
காவிரிக் கிழவன் மாயா நல்லிசைக்
கிள்ளி வளவ னுள்ளி யவற்படர்ந்துஞ்
செல்லேன் செல்லேன் பிறர்முக நோக்கேன்
௧௫) நெடுங்கழைத் தூண்டில் விடுமீ னொடுத்துக்
கிணைமக ளட்ட பாவற் புளியங்கூழ்
பொழுதுமறுத் தின்னு முண்டியே னிழிவுகொண்
டொருசிறை யிருந்தே னென்னே யினியே
யறவ ரறவன் மறவர் மறவன்
௨0) மள்ளர் மள்ளன் றொல்லோர் மருக
னிசையிற் கொண்டா னிசையமு துண்கென
மீப்படர்ந் திறந்து வன்கோ னண்ணி
வல்பரிந்து கிடந்த ..... ..... மிணக்க
விசிப்புறுத் தமைந்த புதுக்காழ்ப் போர்வை
௨௫) யலகின் மாலை யார்ப்ப வட்டித்துக்
கடியு முணவென்னக் கடவுட்குந் தொடேன்
கடுந்தேர்ப் பள்ளற் கசாவா நோன்சுவற்
பகடே யத்தையான் வேண்டிவந் ததுவென
வொன்றியான் பெட்டா வளவை யன்றே
௩0) யான்று விட்டன னத்தை விசும்பின்
மீன்பூத் தன்ன வுருவப் பன்னிரை
யூர்தியொடு நல்கி யோனே சீர்கொள
விழுமென விழிதரு மருவி
வான்றோ யுயர்சிமையத் தோன்றிக் கோவே.

திணை - அது; துறை - பரிசில்விடை.

தாமான் றோன்றிக்கோனை ஐயூர் முடவனார். (௩௯௯)

(௪00.) மாக விசும்பின் வெண்டிங்கண்
மூவைந் தான் முறைமுற்றக்
கடனடுவட் கண்டன்ன வெண்
ணிலவிசைய மரபேத்திக்

